B19

Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 239, 240

ஆசிரியா: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1968 நவம்பர், டிசம்பர்மீ கீலகஷு கார்த்திகை, மார்கழிமீ

# ஸ்ரீ ராமாநுஜன் — 239, 240.



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

....ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 20 | கீலகஸு கார்த்திகை, மார்கழி 1968ஸு நவம்பர், டிசம்பர் வெளியீடு. | ஸஞ்சிகை 11, 12 |
|---|---|---|


## ஐப்பசித் திருமூல மலர்

ஆரியர்காள்! நற்பொருளெழுநூறு என்று நாம் வெளியிடத் தொடங்கிய நூலில் முதல் நூறும் ஆருவது நூறும் வெளியிடப்பட்டுள்ளனவென்பதை அறிந்திருக்கின்றீர்கள். இரண்டு மூன்று நான்காவது நூறுகள் இப்போது ஐப்பசித் திருமூல மலராக வெளியிடப் படுகின்றன. எஞ்சி நிற்கும் ஐந்தாவது நூறும் ஏழாவது நூறும் பிறகு வெளியிடப் பெறும். இப்போது வெளிவரும் மூன்று நூறுகள் "நவரத்ன நவநிதி" என்னும் பெயர்பூண்டு வெளிவருகின்றபடியைக் காணவேணும். நவரத்னங்கள் நிறைந்த நவநிதிகள் என்னும்படியான ஒன்பது பரிச்சேதங்கள் கொண்டதான இந்நூலில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்கள் முக்கியமாகவும் ஸாரமாகவும் அறிந்துகொள்ளவேண்டிய ஸகலார்த்தங்களும் எளியநடையில் தெளிய வெளியிடப்பட்டிருப்பதால் இச்சஞ்சிகை ஆத்திகர்களின் கையில் எப்போதும் விளங்கத் தக்கதாகும்.

ஒரு முக்கிய அறிவிப்பு:—நமது ஸ்ரீ ராமாநுஜனுக்கு இருபது பிராயம் பூர்த்தியடைந்துவிட்டதென்பதை இதுகாறும் இருநூற்று நாற்பது ஸஞ்சிகைகள் வெளிவந்தமை கொண்டு அறியலாம். அடுத்தபடி வெளிவரவேண்டிய இருநூற்று நாற்பத்தோராவது ஸஞ்சிகை 1969ஸு ஜனவரி மாதத்தில் வெளிவரும். அந்த மாதமே ஸ்ரீ ராமாநுஜனுக்கு இருபத்தோராவது பிராயத் தொடக்கமாகும். அதற்குள் பழைய சந்தா பாக்கியையும் புது வருடச் சந்தாவையும் அனுப்பித் தங்கள் பெயரைப் பதிவுசெய்துகொள்ளுமவர்கட்கே ஸஞ்சிகை அனுப்பப்பட்டுவரும். ... ... ○

## மணவாளமாமுனிகள் மஹோத்ஸவ நிகழ்ச்சி

மாமுனிகளின் ஐப்பசித் திருமூல மஹோத்ஸவம் தேசமெங்கும் தேசுபொலிய நடந்தாலும் ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸந்நிதியில் கோயில் கொண்டருளும் மாமுனிகளுக்கு நடைபெறும் மஹோத்ஸவம் பரமவிலக்ஷணமென்பதை அநுபவரஸிகர்கள் அறிவர்கள். தினப்படியாக காலை 11 மணிக்கு அலங்காரத் திருமஞ்சனம் ஆரம்பமாகி மாலை 4 மணிவரை அருளிச்செயல் ஸேவை சாத்துமுறை. இரவு 7 மணிக்குப் புறப்பாடாகி ஸந்நிதியின் திருமுன்பே கொட்டகையில் பத்தியுலாத்தலும் ஊஞ்சலும் நாயனக்கச்சேரியும் நடைபெற்று, பதினொருமணியளவாகத் திருவாய்மொழி ஸேவை சாத்துமுறை. திருமூலநன்னாள் சாத்துமுறையன்று மாலை 7 மணிக்குத் திருப்பாவை சாத்துமுறையாகி, தேவப்பெருமாள் விசேஷ வைபவமாகத் திருவீதி புறப்பாடு கண்டருளி 9 மணிக்கு மாமுனிகள் ஸந்நிதி சேர்ந்து அடையவே ஸேவை சாத்துமுறையாகி, பின் மாலை 4 மணிக்கு மாமுனிகளோடு கூடவே ஸந்நிதி சேர்ந்து பஹுமானித்து விடை தந்தருளுங்காட்சி கொள்ளமாளா இன்ப வெள்ளமேயாம். மறுநாள் இயற்பா சாத்துமுறையுடன் மஹோத்ஸவம் தலைக்கட்டிற்று. ... ... ❁

## அரியபெரியதோர் வெளியீடு

நிகழும் கீலக வருடத்தின் பங்குனி விசாகத்தில் ஸ்ரீ ராமாநுஜன் பத்ராதிபர்க்கு எழுபத்தெட்டு பிராயப் பூர்த்தியாதலால் அதை முன்னிட்டு ஒரு பெரிய மலர் வெளிவரப் போகின்றது. அதன் பெயர் ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வம் என்பதாம். உண்மையில் அந்தப் பெயருக்கு ஏற்றவாறு அதில் நம் பகவத் ராமாநுஜ ஸம்ப்ரதாயார்த்த பரிசீலனங்கள் பலமுகமாக வெளிவருவதுடன் புகழுடம்புடன் ஜீவிப்பவர்களும் ப்ரத்யக்ஷத்தில் ஜீவிப்பவர்களுமான பல பெரியார்களின் புகழுரைகள் வெளிவரும். ப்ரஸித்தர்களாக எழுந்தருளியிருந்த—எழுந்தருளியிருக்கின்ற மஹான்களின் திருவுருவப் படங்களை (ப்ளாக்குகளை) யாரேனும் உபகரித்தால் அன்புடன் ஏற்றுக்கொண்டு வெளியிடுவோம்.

மீண்டும் தெரிவிக்கிறோம்;—மேலே ப்ரஸ்தாவித்த மலர் எம்பெருமானார் தரிசனத்திற்கு ஒரு பெரிய நிதியாகவே விளங்கும். இச் சஞ்சிகையில் வெளிவருகின்ற 'நவரத்ந நவநிதி'யானது அதற்கு ஆதர்சருபமாக அறியத்தக்கது. ஸமீபகாலத்தில் அபத்தஜடிலமாயும் அஸம்பத்தமயமாயும் தோன்றியுள்ள சில மலர்களைக் கண்டு உள்வெதும்பியிருக்கும் உத்தம சீலர்களின் உள்ளங்குளிர வெளிவரும். ... ... ❁

## திருமலையில் ஸ்ரீராமக்ரது விசேஷம்

ஏற்கெனவே சென்ற ஸ்ரீ ராமாநுஜனிதழில் பிரசுரஞ் செய்திருந்தபடி ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமந்நாராயண ஜீயர்ஸ்வாமியின் ஸ்ரீராம மஹாக்ரதுவின் நூற்றெட்டாவது நிகழ்ச்சி [ஸமாப்தி யனுஷ்டானப்] 1—11—68 முதல் 11—11—68 (புநர்வஸு நக்ஷத்ரம்) வரையில் லோகோத்தரமான ப்ரக்ரியையில் நடக்கவிருக்கிறது. ஸ்ரீ ஸ்வாமி ஸந்நிதியிலிருந்து ஆஹ்வான ஸ்ரீமுகம் பெற்றவர்கள் முதல்நாளே திருமலைக்குச் சென்று தம்தம் யோக்யதைக்குத் தக்கபடி க்ரதுவில் அந்வயித்து க்ருதார்த்தர்களாகவேண்டியது.

இப்படிக்கு, ஸ்ரீ கார்யகர்த்தா.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# ஸ்ரீ காஞ்சீ நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடனம்

(கீலக வருஷ 1968)

ஸ்ரீ காஞ்சி தேவப்பெருமாள் ஸந்நிதியின் திருமுன்பே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நம்பிள்ளைக்கு நாளது கார்த்திகைமீ 9உ (24—11—68) ஞாயிற்றுக்கிழமை உத்தராட நக்ஷத்திரத்தில் திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகைமீ 18உ (3—12—68) செவ்வாய்க்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்திரத்தில் சாற்றுமுறையாகும். பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டு வேளைகளிலும் திவ்யப்ரபந்த ஸேவை கோஷ்டிகளும் ததீயாராதனமும் விசேஷ வைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் இடையிடையே நடைபெறும். ஆஸ்திகர்களனைவரும் வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்கவேணும். இம்மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்துவரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தல வசதி முதலிய ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படும். ஸ்ரீவைஷ்ணவ பக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக்கூடிய மஹோத்ஸவமிது.

இரண்டாயிரம் ரூபாய் செலவில் விசேஷ வைபவங்களுடன் நடைபெற்று வருகின்ற இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து உபகரிக்கும் பொருளும் அபேக்ஷிதமாகும். அவரவர்கள் யதாசக்தி பொருளுதவி புரிந்து ஆசார்ய ஸார்வபௌமருடைய இம் மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இங்ஙனம்,

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்,

(நம்பிள்ளை ஸந்நிதி காவலாளர்)

# திருக்கோட்டியூர் ஸ்ரீ ஸௌம்ய நாராயணப் பெருமாள் தெப்பவுத்ஸவ ததீயாராதன ஸபை

காரியதரிசிகள்:
T. ரங்கராமாநுஜய்யங்கார்,
கொ. அக்ரஹாரம் பள்ளத்தூர்.
(R. Dt.)
T. S. ஸ்ரீனிவாஸய்யங்கார்,
திருக்கோஷ்டியூர்.
(R Dt.)

தலைவர்:
ராம. ராகவய்யங்கார்,
திருக்கோஷ்டியூர்.
(R. Dt.)

உப தலைவர்கள்:
சே. குப்புசாமி அய்யங்கார்,
பள்ளத்தூர்.
(R. Dt.)
திரு. வெங்கடாசாரியார்,
காரைக்குடி.
(R. Dt.)

## விஜ்ஞாபனம்

ஆழ்வார்கள் உகந்தருளிய திவ்ய தேசங்களில் பாண்டி நாட்டுப்பதி பதினெட்டில் திருக்கோட்டியூர் நம்பிகள் அவதாரஸ்தலமாயும் நம்பிராமாநுசன் பதினெட்டு ஆவ்ருத்தி நடையாடிய திவ்ய தேசமாயும் ஆழ்வார் ஐவரால் மங்களாசாஸநம் செய்யப்பெற்ற புண்யபூமியுமான திருக்கோட்டியூர் திவ்ய தேசத்தில் ஸேவை ஸாதித்து வருகிற ஸ்ரீ ஸௌம்ய நாராயணப் பெருமாளை மங்களாசாஸநம் செய்வதன் நிமித்தம் ஓரோர் விசேஷங்களில் பல ஸ்வாமிகள் எழுந்தருளி வருகிறார்கள். இப்படி எழுந்தருளுகிற ஸ்வாமிகள் தங்கியிருந்து போய் வருவதற்கும் தர்சந நிர்வாஹ நிமித்தம் ஸ்வாமி எம்பெருமானார் நியமித்தருளிய ஆசார்ய பரம்பரையிலே இருந்து அலங்கரிக்கக்கூடிய ஸ்வாமிகள் எழுந்தருளுகிற காலங்களில் அவர்களை எழுந்தருளச்செய்து உபசரிப்பதற்கும் சௌகரியமாக ஷெ ஊரில் ஒரு திருமாளிகை அவசியம் அமையப்பெற வேணுமென்பதை நினைத்து மஹநீயர்களின் அநுக்ரஹ பலத்தால் சமீபத்தில் திருக்கோஷ்டியூர் மேல ரத வீதியில் சற்று ஜீர்ணமானவொரு கிருஹம் வாங்கப் பெற்றுள்ள செய்தியை முதலில் விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறோம்.

ஷெ திருமாளிகையின் ஜீர்ணோத்தாரண கைங்கர்யத்திற்குப் பல பெரியோர்கள் மனமுவந்து அளித்துதவிய உபகாரத்தினால் பெரும்பகுதி மராமத்துக் காரியங்கள் கவனிக்கப்பட்டு இன்னும் ஒரு சில வேலைகளை கவனிக்கப்படவேண்டியதாயிருக்கிறது. அதற்கு சுமார் ரூ 2000/-வரை செலவு வரலாமென்று மதிக்கப்பெறுகிறது. இதை நம் ஸம்ப்ரதாய அபிமானிகளிடமே பிரார்த்தித்து அன்னவர்கள் உபகரிக்கும் திரவிய சகாயத்தைக் கொண்டே நிறைவேற்றுவதென்ற மனோரதத்தையடியொற்றி இப்பிரார்த்தனை லிகிதத்தை ஸமர்ப்பித்துக்கொள்ளுகிறோம். இம்மகத்தான கைங்கர்யத்திற்குப் பரம கிருபையுடன் உபகரித்தருளி இக்கைங்கர்யத்தைத் தலைக்கட்டி வைத்தருளப் பெரிதும் பிரார்த்திக்கிறோம்.

நாளது கீலக ஆண்டு மாசிப் பௌர்ணமியில் நிகழவிருக்கின்ற ஸ்ரீ கோஷ்டீ மாதவன் திருப்பள்ளியோட வுத்ஸவத்திற்குள் இக்கைங்கர்யத்தைப் பூர்த்திசெய்துவிட வேணுமென்ற பாரிப்பு பெரிதும் உளதால் தங்கள் மஹோபகாரத்தை சீக்கிரமே அனுப்பித் தந்து ஆதரித்திடவேணுமாய் விநயபூர்வமாகப் பிரார்த்திக்கிறோம். காரியதரிசியான ஸ்ரீமான் T. ரங்கராமாநுஜய்யங்கார் முகவரிக்குப் பணம் செலுத்தவேண்டியது. ○

# மணவாளமாமுனிகள் வைபவ ஸாரம்.

[ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசார்ய தாஸன்]

நமது ஸம்பிரதாயமானது ஆழ்வார்களாலும் ஆசாரியர்களாலும் பெருமை பெற்றுப் பொலிகின்றது. இவ்வாழ்வாராசாரியர்களின் பரம்பரையானது பொய்கை யாழ்வார் தொடங்கிப் பொய்யிலாத மணவாளமாமுனிகளோடு தலைக்கட்டுகின்றது. இப்பெரியார்கள் நமக்குச் செய்தருளிய பேருதவிகளுக்கு நாம் செலுத்தவேண்டிய கைம்மாறு அவர்களுடைய புகழ்களை வாயாரச் சொல்லிப் போற்றுவதும் கையாரவெழுதி மகிழ்வதுமேயாம். நாமாகச் சில செய்யுள்களையோ சுலோகங்களையோ இயற்றிப் போற்றுவதிற்காட்டிலும் முன்னோர்கள் மொழிந்தவற்றைக் கொண்டு போற்றுவது மேம்பட்டதாம். ஆழ்வார்களில் நம்மாழ்வார் ஒருவர்க்குமட்டுமே மதுரகவிகள் அருளிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற துதியுள்ளது. மற்றுள்ள ஆழ்வார்களுக்கு அவரவர்களின் திவ்யப் பிரபந்தங்கட்குத் தோன்றியுள்ள தனியன்களைத் தவிர வேறொரு துணுக்கையும் துதியாக அமைந்திலது.



இனி ஆசாரியர்களைப்பற்றிப் பேசப் புகுவோமாயின் ஸ்ரீ ராமாநுஜரொருவர் தவிர மற்றெவர்க்கும் தோத்திர நூல் அமைந்திலது. இராமாநுச நூற்றந்தாதியானது ஆசாரியரின் காலத்திலேயே அவதரித்து மேன்மை பெற்றது. யதிராஜஸப்ததி, யதிராஜவிம்சதி, யதிராஜ தண்டகம் முதலானவை பிற்காலத்தில் தோன்றியவை. ஸமகாலத்தில் தோன்றியதான துதிநூல் மேலே கூறிய நூற்றந்தாதி யொன்றேயாம். வடுகநம்பியென்பவர் யதிராஜ வைபவமென்றொரு வடமொழி நூல் பணித்தாரெனினும் அது சரித்திர நூலேயன்றித் தோத்திர நூலன்று. இராமாநுசர்க்கு அடுத்துள்ள எம்பார், ஆழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை முதலான ஆசாரியர்களுக்கு ஒரு தோத்திர நூலும் திருவவதரிக்கக் கண்டிலோம். இதனால் தோத்திரம் செய்யக்கூடிய பெருமை அவ்வாசிரியர்களிடத்து இல்லையென்று நாம் சொல்லுவதாகக் கருதலாகாது. பிரகிருதம் மணவாளமாமுனிகளைப்பற்றி நாம் கூறுவதை மட்டும் குறிக்கொள்ளவேணும்.

"ஏராரு மெதிராச ரெனவுதித்தான் வாழியே" என்று வாழ்த்தப்பட்டுவருகின்ற மாமுனிகள் எம்பெருமானாருடைய அபராவதாரமாகத் தோன்றினவரென்பதில் ஐயமில்லை. இவ்வளவேயன்று; அவர்தம் அவதாரத்திற்காட்டிலும் மிக்க மேம்பாடுடையது மாமுனிகள் தம் அவதாரம். சுதந்திரமாகப் புதிய நூல்களை அருளிச்செய்வதில் விசேஷ விருப்பமற்று ஏற்கெனவேயுள்ள சிறந்த நூல்களுக்கு வியாக்கியானமான நூல்களை இயற்றுவதிலேயே ஊக்கமும் ஊற்றமும் இருவர்க்கும் ஸமமானது. ஸ்ரீ பாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், கீதாபாஷ்யம் என்னுமிவை (ஸ்ரீ ராமாநுஜரியற்றியவை) வியாக்கியான

நூல்களேயன்றோ? அப்படியே மணவாள மாமுனிகளும் "சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடு நாள்" என்கிறபடியே பிள்ளைலோகாசாரியருடையவும் அவரது திருத்தம்பியாருடையவும் அருமருந்தன்ன திவ்விய ரஹஸ்ய நூல்களுக்கு வியாக்கியானங்களை யருளிச்செய்தார். ஸ்ரீ ராமாநுஜர் வேதார்த்த ஸங்க்ரஹம், கத்யத்ரயம், நித்யம் என்கிற சுதந்திர நூல்கள் சிலவற்றையும் அருளியதுபோல மாமுனிகளும், யதிராஜவிம்சதி, உபதேச ரத்தினமாலை முதலிய சுதந்திர நூல்களும் பல இட்டருளினர். இவ்வகையாலே இவ்வாசிரியர்களிருவர்க்கும் ஒருப்புடையொப்புமை என்பது நிற்க, மாமுனிகளுக்கு ஸ்ரீ ராமாநுஜரிற்காட்டிலும் மிக்க ஏற்றமுள்ளமை கேண்மின்.

உபதேச ரத்தின மாலையில் "ஓராண் வழியாய் உபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில், ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று, பேசி வரம்பறுத்தார் பின்" என்ற பாசுரத்தின்படி ஸ்ரீ ராமாநுஜர்க்கு ஓர் ஏற்றம் பிரசித்தமாக உள்ளது. (அதாவது) ஆளவந்தார் முதலான முன்னோர்கள் அர்த்த விசேஷங்களின் அருமைபெருமைகளைக் கண்டு மறைத்தொளித்துப் போந்தார்களாயிருக்க, ஸ்ரீ ராமாநுஜர் அங்ஙனமன்றிக்கே பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் கூறுமாறு கட்டளையிட்டதாகக் காண்பதேயாம். இங்ஙனே பிறர்க்குக் கட்டளையிட்ட அப்பேராசிரியர் முன்னம் தாம் ரஹஸ்யப் பொருள்களை ஏடுபடுத்தி விளக்கியிருக்க வேண்டும். பிரமசூத்திரத்துக்குப் பல உரைநூல்களிட்டருளின ராமாநுஜர் ரஹஸ்யப் பொருள்களை விளக்கி ஒரு நூலும் பணித்திலரன்றோ? அஃது அவர்க்கு ஒரு குறையேயாகும். அக்குறையைத் தீர்த்துக்கொள்வதற்காகவே அவ்விராமாநுஜர் தாமே மாமுனிகளாகத் திருக்கோலம் பூண்டார். இவ்வவதாரந்தன்னில் செய்தருளின காரியங்களே மிகமிகப் புகழத்தக்கவையாயின.

இப்பேருதவியின் பெருமையைக் கண்டே மாமுனிகளுக்குப் பலபல தோத்திர நூல்களை அக்காலத்தவர்களே இட்டு வைத்தனர். வடமொழியில் ஸ்ரீமத் வரவரமுனி சதகமென்று நூறுநூறு சுலோகங்கள் கொண்ட இரண்டு துதி நூல்கள் தோன்றின. ஒன்று எறும்பியப்பா பணித்தது; மற்றொன்று அஸ்மத்குலகூடஸ்தரான பிரதிவாதி பயங்கராசாரியர் பணித்தது. அன்றியும் "பிள்ளைப்பெருமாளையங்கார் அஷ்டப்பிரபந்தங்கள்" என்னுமாபோலே, மாமுனிகளின் திருவடி பணிந்து அஷ்டதிக்கஜாசாரியர்களென்று பேர் பெற்ற எண்மர் எட்டுப் பிரபந்தங்கள் தென்மொழியில் இட்டு வைத்தனர். எறும்பியப்பா என்னுமாசிரியர் வரவரமுனி சதகமொன்றேயன்றி வரவரமுனி காவியம், வரவரமுனி சம்பூ, வரவரமுனி கர்ணாமிர்தம், அம்ருதத்வனி, தினசர்யா என்றிவை முதலான பல துதி நூல்களையும் பணித்துள்ளார். இத் துதிநூல்களெல்லாவற்றிலும் கூறப்பட்டுள்ள விஷயங்களை ஸாரமாக எடுத்துரைப்போமாயின் 'மாமுனிகளின் திருநாவீறு ஒப்பற்றது' என்பதொன்றே தேறி நிற்கும். இவர்தம் முந்தின அவதாரமான ஸ்ரீராமாநுஜரைப் பற்றின நுற்றந்தாதி முதலான துதி நூல்களை நோக்குங்கால் பிற மதத்தவர்களின் செருக்கையடக்கினரென்பது அவர் தம் பெருமையின் ஸாரமாகத் தெரியவரும். விரோதிகளை மாய்க்கும் பணி அவ்வவதாரந்தன்னில் தலைக்கட்டிற்றதலால் மாமுனிகளான இவ்வவதாரத்தில் "முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்

முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்'' என்று தாமே பணித்தருளினபடி தூயவமுதைப் பருகிக் களிப்பதே செயலாகவிருந்தது இவ்வவதாரத்தினேற்றம்.

ஸ்ரீராமாநுஜரும் மாமுனிகளுமான இரண்டவதாரங்களையும் உற்றுநோக்குமளவில் ராமாநுஜரை ஸூரியனாகவும் மாமுனிகளைச் சந்திரனாகவும் அறுதியிடலாம். உலகத்தில் பலர் பலவகையான விருதுகளைப் பெறுவதுண்டு. பண்டிதர் என்றும், வித்வான் என்றும், வாக்மி என்றும், விசாரதர் என்றும் அவரவர்கள் பெறும் விருதுகளைக் காண்கிறோம். மாமுனிகள் பெற்ற விருது 'விசதவாக் சிகாமணிகள்' என்பது. கடல் சூழ்ந்த மண்ணுலகினுள் இந்த விருது மாமுனிகளொருவர்க்கே ஏற்கும். கூறியது கூறல், மயங்கவைத்தல், நலிந்து பொருள் கொள்ளவைத்தல், இன்னது சொல்லிற்றென்று தெரியாதபடி பேசிவைத்தல், பிறர் மனம் நோவப் பேசுதல், வீண் பேச்சுக்களை வளர்த்தல், முன்னோர் மொழிந்த முறைகளுக்கு மாறாகப் பேசுதல், முன்பின் முரண்படப் பேசுதல் முதலிய குற்றங்குறைகளை மாமுனிகளின் திவ்விய ஸூக்திகளில் இறையுங் காணவியலாது. இதைப் பலகால் பேசினாலும் புநருக்தியாகாது.

நம்பிள்ளையென்னுமாசிரியர் அரங்கன் ஸன்னிதியில் திருவாய்மொழியின் அரும் பெரும் பொருள்களை அனவரதமும் அருளிச்செய்து போந்தாரென்கிற பிரஸித்தியிருந்தும் அரங்கன் அவ்வாசிரியரைத் தனக்கு ஆசாரியராகக்கொள்ளவோ சிறப்புப்பாயிரமென்கிற தனியனை அவர்க்குப் பணிக்கவோ மனங்கொண்டிலன். அப்பரமன்தானே மாமுனிகள் பக்கலிலே சீடனாக இருந்து சந்திர ஸூரியர்கள் உள்ளவளவும் உலகில் ஓங்கி விளங்கி நிற்குமாறு உலகம் புகழும் தனியனொன்றை விண்ணப்பம் செய்தது மிக அற்புதம். அந்த வரலாற்றின் சுருக்கம் வருமாறு:

தென்திருவரங்கம் கோயில்கொண்ட பெருமான் மணவாள மாமுனிகளுக்குத் தான் சீடனாகி அவரைத் தனக்கு ஆசிரியராகக்கொள்ளக் குதுகலித்தனன். திருவாய்மொழிக்குச் சிறந்த வியாக்கியானமாக அமைந்த ஈடு முப்பத்தாறாயிரப்படியின் அரும்பெரும் பொருள்களை மாமுனிகளின் திருவாக்கினால் கேட்கப்பெறவேணுமென்று ஆவல் கொண்டனன். தனது திருக்கோயிலின் திருமுன்பே எழுந்தருளியிருந்து விளம்பியருள வேணுமென்று கட்டளையிட்டனன். அது கேட்டவுடனேயே மாமுனிகள்,

"நாமார் பெரியதிரு மண்டபமார்? நம்பெருமாள்
தாமாக வெம்மைத் தனித்தழைத்து—நீ மாறன்
செந்தமிழ் வேதத்தின் செப்பொருளை நாளுமிங்கே
வந்துரையென் றேவுவதே வாய்ந்து''

என்று நைச்சியமாய் அநுஸந்தித்து மறுநாள் தொடங்கி ஓராண்டளவும் மேலே சொன்ன ஈடு முப்பத்தாறாயிரப்படியின் சீரிய பொருள்களைச் சிறப்புற விளக்கி வந்தார். அவ்வாண்டில் திருவரங்க நாதனுடைய நித்திய நைமித்திகத் திருவிழாக்களெல்லாம் நிறுத்தப்பட்டிருந்தன. ஓர் ஆனி மாதத் திருமூல நன்னாளில் இந்தப் பிரவசனம் சாத்துமுறை செய்வதாக நிச்சயிக்கப்பட்டு அது நடைபெற்று வரும்போது அரங்கநாதன் ஒரு சிறு குமாரனாய் அத்திரளிலே வந்து நின்று, "ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம், யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்'' என்று கைகூப்பி நின்று

விண்ணப்பஞ்செய்து விரைந்து சென்று மறைந்தனன். இந்த இதிகாசத்தை மாமுனிகளின் சீடர்களென்று பிரசித்தர்களாய் அஷ்டதிக்கஜாசாரியர்களென்று வழங்கப்படுபவர்களான ஆசிரியர்கள் எண்மரும் வடமொழிச்சுலோகங்களிலும் தென்மொழிச் செய்யுள்களிலும் அமைத்துப் பாடியுள்ளார்கள். அந்நாள் தொடங்கி அரங்கநாதனது கட்டளையினால் ஊரும்நாடுமுலகமுமெங்கும் இத்தனியனே கோவில்களிலும் மடங்களிலும் மனைகளிலும் திவ்வியப் பிரபந்தங்களோதும்போது தொடக்கத் தனியனாக விளங்கி வருகின்றது.



வியாக்கியானங்கள் அருளிச்செய்வதில் மணவாள மாமுனிகளின் திறமை ஒப்புயர்வற்றது. பிள்ளைலோகாசாரியர் என்னுமாசிரியர் 'அஷ்டாதச ரஹஸ்யம்' என்று பெயர் பெற்ற பதினெட்டு ரஹஸ்ய நூல்களைப் பணித்திருந்தார். அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்யஹ்ருதயமென்னும் ரஹஸ்ய நூலை அருளிச்செய்திருந்தார். ஸ்ரீ வைஷ்ணவ ஸமயத்தில் உபயவேதாந்தமென வழங்கப்படுகின்ற வடமொழி தென்மொழி மறைகளின் ஆழ்ந்த கருத்துக்களை ஆர அமர ஆராய்ந்து வெளியிட்ட நூல்கள் இவற்றுக்கு மேற்பட வேறு எதுவுமில்லை. உலகாசிரியர் பணித்த பதினெட்டு ரஹஸ்யங்களுள் ஸ்ரீ வசனபூஷணம் தத்துவத்திரயம், முமுக்ஷுப்படி என்ற மூன்று ரஹஸ்ய நூல்களானவை அறியவேண்டும் அர்த்தமெல்லாம் அடங்கி நிற்பனவென்றுகொண்டு இவற்றுக்கு வியாக்கியானம் அருளிச்செய்தனர் மாமுனிகள். ஆசார்யஹ்ருதயமென்னும் நூலானது மேலேகுறித்த மூன்று ரஹஸ்யங்களும்

நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களும் சேர்ந்து ஒரு வடிவுகொண்ட தென்னும்படி அமைந்ததாதலின் அதற்கும் வியாக்கியானமிட்டருளினார் மாமுனிகள். இவர் அருளிச்செய்த நூல்கள் மற்றும் சில பல இருப்பினும் இந்நான்கு வியாக்கியான நூல்களும் நான்கு வேதங்களினும் மேம்பட்டவையென்னலாம்படி அமைந்தன.

உலகில் வியாக்கியான நூல்கள் எண்ணிறந்தவை தோன்றியுள்ளன. பெரிய வாச்சான்பிள்ளையும் வடக்குத்திருவீதிப்பிள்ளையும் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கட்கு வியாக்கியானங்கள் இயற்றினார்களேயன்றி, 'ஸூத்ரங்கள்' என்னும் வகையிலே அமைந்த இத்தகைய நூல்களுக்கு வியாக்கியானம் இயற்றினவர்கள் ஸ்ரீ வைஷ்ணவ ஸமயத்தில் மாமுனிகளைத் தவிர வேறு எவ்வாசிரியருமிலர். மூலத்திற்கு அவதாரிகையிடுகிற அழகும், மூலத்தை விவரித்தருளுகிற பாங்கும், ஆங்காங்கு அர்த்தங்களைத் தொகுத்து நிகமித்தருளுகிற பண்பும், பண்டிதர்கட்கும் தோன்றமாட்டாத சங்கைகளைத் தோற்று வித்துப் பரிஹார வழிகளை உணர்த்தும் பரிசும், பிற மதங்களை மறுத்தெழுத நேர்ந்தாலும் ஒருவர் மனமும் நோவாத படிக்கும், வீணான நிந்தைகளும் பரிஹாஸங்களும் புகாத படிக்கும் எந்த இடத்தை யெடுத்தாலும் சாஸ்திர நுண் பொருள்களே கைகொள் கனியாம்படிக்கும், 'நூற்கடல்கள் எல்லாவற்றையும் கரைகண்டவர் இவர் ஒருவரே' என்று திண்ணமாக எண்ணும்படிக்கும் வியாக்கியானித்தருளினவர் மாமுனிகளொருவரே.

இவருடைய திவ்ய ஸூக்தியமுதக் கடலினின்று முக்கியமான ஒரு விசேஷத்தை முன்னம் இங்கெடுத்துக் காட்டுவோம். மாமுனிகள் தாம் ஆங்காங்கு மூலத்திற்குச் சேர விவரித்து அருளிச்செய்யும் அர்த்த விசேஷங்கள் வேறு சில ஆசிரியர்களின் நூல்களிலு மிருந்தால் அவ்விடங்களை எடுத்துக்காட்டி யருளாதொழியார். இந்த நடை பிற ஆசிரியர்களின் நூல்களிற் காணவரிது; 'சிலர் இப்படி உரைப்பர்; சிலர் இங்ஙனே கூறுவர்' என்று லகுவாகக் காட்டிப் போவார்களேயன்றிப் பெயரையும் இடத்தையும் வாசகங் களையும் காட்டவே மாட்டார்கள். மாமுனிகள் வியாக்கியான நடை இத்தகையதன்று. 'இன்ன ஆசிரியர் இன்னவிடத்திலே இன்னபடி கூறியுள்ளார்; அவரது வாசகங்கள் இவை' என்று மிக விளக்கங் காட்டியே தீருவர். இது மாமுனிகளின் திவ்யஸூக்திகளுக்கு உண்டான தனிச்சிறப்பு. இது காரணமாகவே, "பொய்யிலாத மணவாள மாமுனி புந்தி வாழி" என்று உலகப் பிரசித்தமான வாழ்த்து அமைந்தது.

வைணவ சமயக் குரவர்களில் வடமொழியிலும் தென்மொழியிலும் சிறியனவும் பெரியனவுமாக நூல்கள் இயற்றினவர்கள் [ஆழ்வார்களைத் தவிர] ஏறக்குறைய இருபதின்மர் (உலகம் போற்ற நின்ற ஆசிரியர்கள்) மாமுனிகளுக்கு முற்பட்டவர்கள் தேறுவர்கள். அத்தனைபேருடையவும் நூல்களிலிருந்து, உரிய இடங்களில் உயரிய வசனங்களை எடுத்து மேற்கோள் கொடுத்திருக்கும் அழகு அற்புதமானது. இதற்குமேல் மற்றோர் அதிசயம்—மேற்கோள்களை எடுத்துக்காட்டிவிட்டு 'என்கிறபடியே' என்று போய்விடாமல் அவற்றின் பொருளைத் தெரிந்துகொள்வதற்கு வேறு வியாக்கியானங்களைத் தேடவேண்டாமல், அவ்விடங்களில் தமக்கே உரிய நடையில் விவரணமுங் காட்டி யருள்வது மிகப்பெரிய மாண்பு. 'ஆழ்ந்து கூர்ந்து ஆராய்தல்' என்னும் முறையிலே மாமுனிகளின் வியாக்கியானத் திருவாக்குகளை நோக்குங்கால், இராமபிரான் மாருதியின்

இனிய சில மொழிகளைக் கேட்டதும் இளையோனை நோக்கிக் கூறியதாகக் கம்பர் பெருமான் பாடியுள்ள,

"இல்லாதவுலகத் தெங்கு மீங்கிவனிசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக்கடலுமே யென்னுங்காட்சி
சொல்லாலே தோன்றிற்றன்றே ஆர்கொலிச் சொல்லின்செல்வன்
வில்லார்தோள் இளையவீர விரிஞ்சனோ விடைவலானோ?"

என்னுஞ் செய்யுளே நினைவுக்குவரும். இக்காலத்தில் இதிஹாஸபுராண பாஞ்சராத்திரம் முதலிய எல்லா நூல்களும் பல லிபிகளில் பல முறைகளில் பலவகை அட்டவணை களுடனும் அச்சேறியுள்ளன. இஃது ஒரு நூற்றாண்டுக்கு உட்பட்ட செய்தி. ஆசிரியர் காலத்தில் ஓலையேடு தவிர வேறு கிடையாது. அதுவும் ஒரூரில் ஒன்றிரண்டு சுவடிகளுக்கு மேல் காண்பதரிது. எந்த மூலையில் எந்த விஷயமுள்ளதென்று கண்டறிவதற்கும் இயலாது. இத்தகைய நிலையில் மாமுனிகள் இதிஹாஸபுராண ஸ்ரீ பாஷ்யாதிகளான வடமொழி நூல்கள் பலவற்றிலுமிருந்து ஆயிரத்து எழுநூற்று எழுபத்தெட்டு வசனங்களை மேற்கோளாக எடுத்துக்காட்டியுள்ளார் என்று நாம் ஏற்றக்குறைவின்றிக் கணக்கெடுத்து வெளியிட்டிருப்பது உலகம் பரவியுள்ளது. இஃதொன்றைமட்டும் நோக்குங்கால், ஆளவந்தாரென்ற ஆசிரியரால் "ப்ரக்ருஷ்டவிஜ்ஞான பலைகதாமநி" என்று போற்றப் பட்ட ஆதிசேஷனே மாமுனிகளாகத் திருவவதரித்தனரென்று மேலையார் கூறியுள்ளது மிகப் பொருத்தமென்றுணரலாகும்.

மாமுனிகளின் மாண்பைச் சுருங்கச் சொல்லில் தாம் இயற்றியருளின நூல்களுள் ஒன்றான ஆர்த்திப் பிரபந்தத்தில் (பா—28) "பண்டு பலவாரியரும் பாருலகோருய்யப் பரிவுடனே செய்தருளும் பல்கலைகள் தம்மை, கண்டதெல்லாமெழுதியவை கற்றறிந்தும் பிறர்க்குக் காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன்" என்று தாமே யருளிச்செய்தபடி ஏற்கெனவே தோன்றியுள்ள பூருவர்களின் பொன்மொழிகளைப் பிரவசனஞ் செய்தருள் வதிலேயே மிகுந்த காதலுடையராயிருந்தும், இவ்வுலகின் பாக்கிய பரிபாகமடியாக சிஷ்யர் களின் வேண்டுகோளுக்கிணங்கியும் எம்பிரானது கட்டளையை முன்னிட்டும் தேனும் பாலும் கன்னலும் அமுதுமான திவ்விய நூல்களையுமிட்டருளிக் கலியுகத்தைக் கிதயுக மாக்கி எழுபத்து மூன்றாண்டுகள் இந்நிலவுலகத்தில் வாழ்ந்து நலமந்தமில்லதோர் நாடு புகுந்தனரென்பதாம்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் "துவளில் மாமணி மாடமோங்கு" "உண்ணுஞ் சோறு பருகுநீர்" முதலான சில பதிகங்களில் தம்முடைய பெருமையைத் தாமே வெளியிட்டுக் கொண்டவாறுபோல மாமுனிகள் தாமும் ஆர்த்திப் பிரபந்தத்திலே,

"தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்; திருவரங்கந் திருப்பதியே யிருப்பாகப் பெற்றோம்; மன்னியசீர் மாறன்கலை யுணவாகப் பெற்றோம்; மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்; முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்; முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்; பின்னையொன்றுதனில் நெஞ்சு போமற் பெற்றோம்; பிறர் மினுக்கம் பொறாமையிலாப் பெருமையும் பெற்றோமே"

என்று அருளிச்செய்த பாசுரத்தையே நிச்சலும் சிந்தனைசெய்து உய்வோமாக.

மாமுனிகளின் திவ்யஸூக்திகளை மாச்சரியத்தினால் அநுபவிக்கப்பெறாதவர்கள் கிடக்கட்டும். அப்ரமேய பாக்யவசத்தாலே அவற்றை யநுபவிக்கப் பிறந்தவர்களுங்கூட ஆழ்ந்துநோக்கி யநுபவிக்கப்பெறாதார் பலருளரென்பது அடியேனுடைய அனுபவத்தில் கண்ட விஷயம். கடலலைகள்போன்ற விஷயங்களில் ஒரே விஷயம் ஸ்தாலீபுலாகந்யாயேந காட்டிநிற்கிறேன். ஸ்ரீ வசநபூஷணத்தில் (96) "ஆத்ம குணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்" என்பதொரு சூர்ணிகை. இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் "சமமாவது அந்த: கரண நியமநம்; தமமாவது பாஹ்யகரண நியமநம்" என்றருளிச்செய்து, இதற்கு ப்ரமாணங்காட்டியருளத் திருவுள்ளம்பற்றி "*சமச் சித்தப்ரசாந்திஸ் ஸ்யாத் தமச் சேந்த்ரிய நிக்ரஹ:* என்னக்கடவதிறே" என்று ஒரு ப்ரமாணம் காட்டி, உடனே பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியையும் காட்டவேண்டி "*க்ஷமா ஸத்யம் தமச் சம:* என்கிற விடத்தில் 'தமோ பாஹ்யகரணாநாம் அநர்த்த விஷயேப்யோ நியமநம்; சம:—அந்த: கரணஸ்ய ததா நியமநம்' என்றிறே பாஷ்யகாரருமருளிச்செய்தது." என்று கீதாபாஷ்ய ஸூக்தியை யெடுத்துக் காட்டியருளினார். இவ்வளவோடு நில்லாமல் அடுத்தபடியாக "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்றருளிச்செய்தார். அதன் கருத்து என்னவென்றால், பாஹ்யகரணாநாம் நியமநம் தம:, அந்த: கரணநியமநம் சம: என்று இப்படியே கொள்ள வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; அந்த:கரண நியமநம் தம:, பாஹ்யகரண நியமநம் சம: என்று கொள்ளுவதுமுண்டு என்பதாம். கீழே இரண்டு ப்ரமாணங்களைத் தாமே யெடுத்துக் காட்டிவிட்டு அவற்றோடு ஸம்பந்தப்படாதபடி "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்று அருளிச்செய்வது மணவாளமாமுனிகளின் இயல்புக்குச் சேராது; அப்படியிருக்க எங்ஙனே யருளிச்செய்தாரென்று விமர்சிக்க ப்ராப்தம். மேலேகாட்டின ஸ்ரீஸூக்தியில் "மாறிச் சொல்லுவதுமுண்டு" என்னாமல் "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்று ஸாதித்திருக்கை யாலும், அதுதானும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை உதாஹரித்தவுடனே ஸாதித்திருக்கை யாலும் பாஷ்யகாரரான ஸ்வாமியே மற்றோரிடத்தில் மாறிச் சொல்லியிருக்கிறாரென்று தெரிவிக்கப்பட்டதாகிறது. அப்படி ஓரிடத்தைத் தாம் காணாமல் அந்த ஸ்ரீஸூக்தியை ஒருகாலும் அருளிச்செய்யமாட்டார் மாமுனிகளென்பது ஸத்யம். இதுபற்றியேயன்றோ "பொய்யிலாத மணவாளமாமுனிபுந்திவாழி" என்று உலகமெல்லாம் வாழ்த்துவது.

கேண்மின்; அந்த கீதாபாஷ்யத்திலேயே ஸ்வாமி தாமே மாறிச் சொல்லியுள்ளார்; (அதாவது)—பதினாறுமத்யாயத்தில் முதல் சுலோகத்தில் 'தாநம் தமச் ச யஜ்ஞச் ச' என்றும், இரண்டாம் சுலோகத்தில் "த்யாகச் சாந்தி: அபைசுநம்" என்றும் வருகிறது. அங்கும் தம சமங்களுக்கு விவரணமுள்ளது. கீழே காட்டின விவரணம் பத்தாமத்யா யத்தில் நான்காவது சுலோகத்தின் பாஷ்யத்திலுள்ளது. (16—1, 2ல்) காணும் விவரணம் அதனில் வேறுபட்டது. அந்த:கரணத்தின் நியமனத்தை தமமாகவும், பாஹ்யகரணத்தின் நியமனத்தை சமமாகவும் இங்கு பாஷ்யகாரர் அருளிச்செய்துள்ளார். அவரும் ஸ்வோக்தி விருத்தமாகவருளிச்செய்பவரல்லர். இரண்டு படியையும் அவர் ப்ரமாணஸித்தமாகக் கண்டவராகையாலே ஒரு படியை ஓரிடத்திலும் மற்றொரு படியை மற்றோரிடத்திலும் அருளிச்செய்தார். மணவாளமாமுனிகள் அவருடைய புநரவதாரபூதராதலால் இரண்டு படியும் தமக்கு ஹ்ருத்கதமாயிருக்கையாலே "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்றருளினார்.

இங்ஙனே தத்துவமிருக்க, வேதாந்தவாசிரியர் பணித்த தாத்பர்ய சந்த்ரிகையில் மேலே யெடுத்துக்காட்டிய பதினுருமத்யாய ஸ்தலத்தில்—"ஏதேந கேஷாஞ்சித் அநயோச் சப்தயோர் வ்யுத்க்ரமேண அர்த்த வ்யாக்க்யாநம் நிரஸ்தம்" என்கிற பங்க்தி காணப்படு கிறது. மணவாளமாமுனிகள் தேசிகனுடைய காலத்திற்குப் பிற்பட்டவராகையாலே மாமுனிகளின் ஸ்ரீஸூக்திக்கு மறுப்பாக அது அருளிச்செய்ததென்று கொள்வதற்கு அவகாச லேசமுமில்லை. வேறு யாருடைய உக்திக்கு மறுப்பென்று விமர்சிக்குமளவில் சங்கர பாஷ்யத்திற்கு மறுப்பென்று ஸ்பஷ்டமாக விளங்காநின்றது. ஆனல் நம் பாஷ்ய காரருடைய ஸ்ரீஸூக்திக்கும் மறுப்பாகத் தேறுகிறது. வ்யுத்க்ரமேண அர்த்த வ்யாக்க் யானம் பண்ணியருளினவர் நம் பாஷ்யகாரருமாதலால், இது ப்ராமாதிகமென்னவேணும்.

பத்தாவது அத்யாயத்தில் பாஷ்ய ஸ்ரீஸூக்தியிருக்கும்படியையும், அங்கு சந்த்ரிகையில் தாம் விசேஷித்து அருளிச்செய்தபடியையும் மறக்கவல்லவரன்றோ தேசிகன். சமம் தமம் என்று இரண்டுபதம் வேண்டியதில்லை; அந்யதர பதமிருந்தாலும் அதற்கே பாஹ்ய ஆந்தரகரண நியமனத்தைப் பொருளாகக் கொள்ளமுடியும். ஆனலும் தனித்தனி இரண்டு பதங்களிருப்பது வீணுகாதபடிக்கு அர்த்தபேதம் காட்டுவது யுக்தம் என்று திருவுள்ளம்பற்றி "………பௌநருக்த்ய பரிஹாராய விஷயபேதே வக்தவ்யே நியமாநு க்ரமேண தமசமயோ: பாஹ்யாந்தகரண விஷயத்வோக்தி:" என்று சந்த்ரிகையில் ஸாதித் திருப்பதனுல் இதற்கும் சேராதபடியன்றோ பதினுருமத்யாயத்தில் சந்த்ரிகை அவதரித் துள்ளது. அன்றியும் "ஏதேந, வ்யுத்க்ரமேண கேஷாஞ்சித் வ்யாக்க்யாநம் நிரஸ்தம்" என்கிற பங்க்தியும் சிறிது பராமர்சிக்கத்தக்கது. ஏதேந என்பதற்கு 'பாஷ்யகாரர் இப்படி யருளிச்செய்திருக்கையாலே' என்று தானே பொருளாகும். நம்முடைய பாஷ்யகாரர் ஸாதித்ததனலே சங்கரபாஷ்யம் எப்படி நிரஸ்தமாகும். இது மஹா ப்ராஜ்ஞர்கள் விமர்சிக்கவேண்டிய விஷயமென்று விட்டுவிடுகிறேன். மணவாளமாமுனிகளின் பரம ப்ராமாணிகத்வ நிரூபணம் மட்டுமே இங்கு அடியேனுக்கு உத்திஷ்டம். இத்தகைய விப்லவங்களோ உபப்லவங்களோ ஈஷத்தும் இடம்பெருத ஸ்ரீஸூக்திகள் மாமுனி களுடையனவே. ... ... ... ... ... ❁

(வெண்பா.)

மன்னு புகழ்சேர் மணவாள மாமுனிவன்
தன்னருளே தஞ்சமெனத் தாங்கொண்ட—மின்னுபுகழ்
வேதியர்கள் தாளன்றி வேருென் றறியாதார்
மேதினியில் விண்ணவர்க்கும் மேல்.



ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்







ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிவரும்

# நற்பொருளெழுநூறில்-இரண்டாவதுநூறு

# நவரத்ன நவநிதி.

(முன்னுரை.)

ஜன்மாந்தரஸஹஸ்ர நற்றவங்களாலே மானிடப் பிறவியும் ஸ்ரீவைஷ்ணவ ஸத்ஸம்ப்ரதாயப் பிறவியும் பெற்ற மஹாபாக்யவான்கள் ஜன்மஸாபல்யம் பெறத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் கடலினும் மிகப் பெரியவை. அவற்றை நாம் பல நூற்றுக்கணக்கான நூல்களில் விரியவுரைத் திருக்கின்றோம். அவை, பார்க்கும் போது நினைவிலிருந்து, சில நாட்கள் கழிந்தவாறே மறந்துபோகக்கூடியவை யாதலால் மிக்க விரிவும் மிக்க சுருக்கமுமின்றிக்கே இந்தச் சிறு பகுதி நவரத்ன நவநிதி யென்னும் பெயரால் உபகரிக்கப்படுகின்றது. ''அறியவேண்டுமர்த்த மெல்லாம் இதுக்குள்ளேயுண்டு'' என்று திண்ணமாக வெண்ணலாம். ஆழ்வார்களின் பெருமை ஆசாரியர்களின் பெருமை, முமுக்ஷுப்படிஸாரார்த்தம், தத்வத்ரயஸாரார்த்தம், ஸ்ரீவசனபூஷணஸாரார்த்தம் ஆகிய இவற்றையறியப்பெற்றால் போதுமானதுஇவை இந்த நவரத்ன நவநிதிப்பகுதியில் அடங்கியுள்ளன. நம்பிள்ளை முதலாக மணவாள மாமுனிகளீறாகவுள்ள பூருவாசாரியர்களின் திவ்யக்ரந்தங்களில் போதுபோக்க வேண்டியதே முக்கியமானது. லௌகிக வியாபார விசேஷங்களினால் அதற்கு அவகாசமற்றவர்கள் தினப்படி ஒரு மணி காலம் இப்பகுதியில் போதுபோக்கினால் அறிய வேண்டுமவையெல்லாம் அறிந்தார்களாகக் குறையில்லை.

முக்கியமாக உபந்யாஸகர்களுக்குப் பரமோபகாரகமாகவே இஃது அவதரிக்கின்றது,அன்னவர்கள் முன்னம் இதை வாசிக்கும்போது ஆங்காங்குக் குறியிட்டு வைத்து.உபந்யாஸத்திற்கு முன் ஒருமுறை நோக்கி நெஞ்சில் தேக்கிக் கொண்டு சென்றால்தங்களது சொற்பெருக்கு தேனும் பாலும் நெய்யுங் கன்னலுமமுது மாகும்

முன்னுரை முற்றிற்று.

ஸ்ரீ:

நவநிதியில் முதல்நிதி—ஆழ்வார்கள் பெருமை

# முதலாழ்வார்கள் பெருமை

101. நம்ஸம்ப்ரதாயத்தில் முதலாழ்வார்களென்று கொண்டாடப்படுகின்ற பொய்கையார் பூதத்தார் பேயார் என்னும் மூவர் ஓடித் திரியும் யோகிகளாய் தம்மில் ஒருவரை யொருவர் அறியாமல் தனித் தனியே ஸஞ்சரித்துக் கொண்டிருந்ததாகவும், இம் மூவரையும் ஓரிடத்தில் சேர்த்து ஆட்கொள்ள எம்பெருமான் குதூஹலங் கொண்டிருந்ததாகவும், ஒருநாள் ஸூர்யன் அஸ்தமித்த பின்பு பொய்கை யாழ்வார் கனமழையினால் திருக்கோவலூரை யடைந்து ம்ருகண்டு மஹர்ஷியின் திரு மாளிகையிற் சென்று அதன் இடைகழியிற் பள்ளிகொண்டிருக்க, பூதத்தாழ்வாரும் பிறகு பேயாழ்வாரும் அவ்விடத்திற்கே வந்து சேர்ந்ததாகவும் அங்கு மூவரும் அளவளாவி நிற்கையிலே இவர்களை எம்பெருமான் நெருக்கிக் கலந்து பரிமாறினதாகவும் சரித்திரம் கூறப்பட்டு வருகின்றது. இதனால் முதலாழ்வார்கட்குத் திருக்கோவலூரில் மிக்க ஈடுபாடென்பது விளங்குகின்றது. * அந்யோந்யம் கொண்டாடுகிறவர்களாகச் சொல்லப்பட்ட ஆழ்வார்களுள் ஸர்வ கநிஷ்டரான திருமங்கை மன்னன் திருக்கோவலூர்க்குப் பதிகம் பாடுமிடத்து இவ்வரலாற்றினை அநுஸந்தித்திருக்குமழகு இங்கு வெளியிடப்படுகின்றது.

102. பெரிய திருமொழியில் திருக்கோவலூர்ப் பதிகத்தில் நான்காவது பாசுரத்திலே (2-10-4.) "ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்புகூருமடியவர்கட்கு ஆரமுதமானான்றன்னை" என்ற விடத்திற்கு ஆசார்யஹ்ருதயத்தில் காட்டி யருளப்பட்ட பரமரஹஸ்யார்த்தம் இங்கு விவரிக்கலாகிறது. அதில் மூன்றும் ப்ரகரணத்தில் மேகத்திற்கு ஸ்வாபதேச மருளிச் செய்கிற "பூண்ட நாள் சீர்க்கடலை யுட்கொண்டு" இத்யாதி சூர்ணையில் "அன்புகூருமடியவர்" என்றுள்ளதை வியாக்யானித்தருளா நின்ற நம் மணவாளமாமுனிகள் "ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூரும் அடியவரான முதலாழ்வார்கள்" என்று அருளிச் செய்திருப்பது குறிக்கொள்ளத் தக்கது. "ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூருமடியவர்கள்" என்கிற சந்தை திருமங்கை யாழ்வாருடைய திருக்கோவலூர்ப்பதிகத்திலுள்ள தென்னுமிடம் மறக்கத்தக்கதன்று. அப்படிப்பட்ட அடியவர்கட்கு அரிய அமுதமாக இருந்தவன் திருக்கோவலூ ரெம்பெருமான் என்று துதியுள்ளது. அங்கு அடியவர்கள் என்றது முதலாழ்வார்களை யென்று நம் பூருவாசாரியர்கள் ஒரு மிடறாகத் திருவுள்ளம் பற்றியிருந்தார்களென்னுமிடம் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தினால் தெற்றென விளங்குகின்றது. இந்த நிர்வாஹம் மிகுந்தஉபபத்தியோடுகூடியது. எங்ஙனேயெனின், அடியவர் -அன்பு கூருமடியவர் -ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூருமடியவர் என்று வகுத்துக் கொள்ளவேணும். முந்துற 'அடியவர்' என்பது பேயாழ்வாரை. இவர் "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்ற முதற் பாசுரத்தில் எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைத் தாம் காணப் பெற்றதாகப் பேசி, அந்த திவ்யமங்கள விக்ரஹத்துள் திருவடி யொன்றே தமக்கு உத்தேச்யம் என்பதைத் தமது திருவந்தாதியில் ஆதி மத்ய அவஸாநங்களில் வெகு அழகாகக் காட்டினர். "இன்றே கழல் கண்டேன்" என்கிறார் ஆதியில்; "பைம் பொன் முடியா னடியிணைக்கே பூரித் தென்னெஞ்சேபுரி" "முயன்று தொழு நெஞ்சே!.... தண்ணலங்கல் மாலையான் தாள்" "கரியான் கழலே தெருள் தன்மேல் கண்டாய் தெளி" 'வாழும் வகையறிந்தேன்—எங்கள் பெருமானடி சேரப் பெற்று" என்று (நாற்பது முதலாக அறுபது ஈறான பாசுரங்களுள்) மத்யத்தில் பேசினமை காண்க. "குட்டத்துக் கோள் முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான் தாள் முதலே நங்கட்குச் சார்வு" என்று அவஸாநத்திலும் தாளையே பேசித் தலைக்

கட்டினுர். ஆக இங்ஙனம் எம்பெருமானது அடியையே சிக்கெனப் பற்றினவர் என்ற காரணத்தினுல் பேயாழ்வார் அடியவராகக் கூறப்பட்டார்,

103. 'அன்பு கூருமடியவர்' என்றது பூதத்தாழ்வாரை. எங்ஙனே யெனில், (அன்பு கூரும் என்றது அன்புமிகுந்தவர் என்றபடி,) இவ் வாழ்வார் "அன்பே தகளியா" என்று தொடங்கி "விளவின் காய் கன்றினுல் வீழ்த்தவனே! என்றனளவன்ருல் யானுடைய அன்பு' என்று முடிவு பாசுரத்தில் தமது அன்பு மிகுதியை வாய்விட்டு உரைத்தவராதலால் அன்புகூருமடிய்வராக இவரே கருதத் தகுதியுடையவராவர். இனி, அரும்பிக் கண்ணீர் சோருமடியவர் பொய்கையாழ்வார். எங்ஙனே யென்னில், இவ்வாழ்வார் "பழுதே பலபகலும் போயின வென்று அஞ்சியழுதேன்" என்று தம் வாக்கினுலே பேசியருளினபடி அரும்பிக் கண்ணீர் சோர்ந்திருப்பவராதலால்.

ஆக இங்ஙனம் முதலாழ்வார்கள் மூவரையும் அழகாகக் குறிப்பிட்டு இவர் கட்கு அமுதமாயிருந்தவன் அத்தலத்து நாதன் என்று கலியன் அருளிச் செய்தார்.

104. ஸ்ரீமந் நிகமாந்த வாசிரியரும் "அடியவர்கட்கு ஆரமுதமானுன்" என்ற பாசுரத் திலேயே நோக்காக தேஹளீசஸ்துதியில் (7) "காஸார பூர்வகவி முக்க்ய விமர்தஜந்மா புண்யாதடேக்ஷுஸுபகஸ்ய ரஸோ பஹுஸ் தே" என்றருளிச் செய்தார். இங்கு அடியவர்கட்கு என்ற ஸ்ரீஸூக்தியை ஊன்றி நோக்கினுல், கலியன் இங்கு மூன்று திருநாமங்களை விவக்ஷித்திருக்கிறுர் என்று நன்கு விளங்கும். அடியவன்; அடியவர், அடியவர்கள் என முப்புரியூட்டினமை காண்க. .... .... .... .... *

# திருமழிசையாழ்வார் பெருமை



105. இவ்வாழ்வார் அருளிய திவ்வியப் பிரபந்தங்கள் இரண்டு. 1. நான்முகன் திருவந்தாதி, 2. திருச்சந்த விருத்தம். இவையிரண்டும் திவ்ய ப்ரபந்தங்களெல்லா வற்றினுள்ளும் வேதாந்த விழுப்பொருள்கள் நிரம்பித் ததும்பிய மிகச் சிறந்த அரிய பெரிய நூல்களாம். இவ்வாழ்வாருடைய காலத்தில் தேவதாந்தரபரத்துவம் கொள்ளும் மதாந்தரஸ்தர்கள் மலிந்திருந்ததனுல் அவர்களைத் திருத்தி வழிபடுத்த வேண்டுவது இவர்க்கு அவசியமாய் அமைந்தது. ஆகவே, இவர் திருவந்தாதி தொடங்கும் போதே ஸ்ரீமந்நாராயண பரத்வத்தை மிக அழுத்தமாக அருளிச் செய்கின்றுர். அது தலைக் கடுமிடத்தும் "இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம், இனியறிந்தேன்எம்பெருமானுன்னை" என்கிறுர். இடையிலும் பல பல பாசுரங்களினுல் தேவதாந்தரங்களின் அபூர்த்தியையும் பரமபுருஷனுடைய பூர்த்தியையுமே பேசுகின்றுர். ஆகவே, இவரது திருவந்தாதி பெரும்பாலும் பரதத்வஸ்தாபனத்தில் நோக்குடைத்தாயிருக்கும்.

106 இதில் முதற் பாசுரம்—" நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்—யான் முகமாய், அந்தாதி மேலிட்டு அறிவித்தேனுழ் பொருளைச் சிந்தாமற் கொண்மினீர் தேர்ந்து" என்பதாம். இப் பாசுரத்தின் பெரியவச்சான் பிள்ளை வியாக்கியான அவதாரிகையில் அருளிச் செய்யப்பட்டுள்ள ஓர் அற்புதமான திவ்ய ஸூக்தி காண்மின்;—

"ப்ரஹ்மாதிகள் ஸம்ஸாரத்தை ப்ரவர்த்திப்பிக்க ப்ரதாநரானுப் போலே தந்நிவ்ருத்திக்கு ப்ரதாநனுனேன் நானென்கிறுர்" என்று. இந்த ஸ்ரீஸூக்தியின் காம்பீர்யம் வாசாமகோசரம்; இதன் கருத்தாவது — நாராயணன் நான்முகனைப் படைத்துவைத்தான்; அந்த நான் முகனும் மற்றுள்ள ஸ்ருஷ்டிகளைப் பண்ணிப்

போனன். ஆக அவ்விருவரும் இப்படி ஸம்ஸாரத்தை வளரச்செய்து வைத்தார் களேயன்றி அடியறுக்கப் பார்த்தாரல்லர்; நான் அங்ஙனன்றியே, உங்களுடைய ஸம்ஸாரம் வேரறும்படியாக ஆழ்பொருள்களை அறிவிக்க முற்படுகின்றேன் காண்மின்—என்று ஆழ்வார் அருளிச் செய்வதாகப் பெரியவச்சான் பிள்ளை எடுத்துக் காட்டியருளியிருப்பது பரமரஸம்.

107. இவ்வாழ்வார் ஆழ்பொருளை அறிவிக்கத் தொடங்கும்போதே அறிவித் தேனாழ் பொருளை என்று இறந்த காலத்தாற் கூறினது—தம்மைக் கொண்டு அறிவிக்க விரும்பிய எம்பெருமான் ஸத்ய ஸங்கல்பனாகையாலும், எம்பெரு மானுடைய பரத்துவத்தைப்பற்றிப் பாசுரங்கள் பேசித் தலைக்கட்டியே தீரும்படி யான தம்உறுதியினாலும் இப்ப்ரபந்தம் தலைக்கட்டியாய் விட்டதாகவே நினைத்தாம். இதனைத் தமிழர் தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட கால வழுவமைதி யென்பர்.

இப்பாசுரம் முதலிய இருநூற்றுப் பதினாறு பாசுரங்களை (இரண்டு நூலாக) உதவியருளின இம்மஹான் *நற்றவர்கள் கொண்டாடும் நாளான தையில் மகத்தில் திருவவதரித்து நம்மை வாழ்வித்தருளினர்.... .... .... *

# நம்மாழ்வார் பெருமை

—★—

108. காரிமாறன், குருகூர்ச்சடகோபன், வகுளாபரணன், மகிழ்மாலைமார்பினன், பராங்குசர், ஸ்ரீசடாரி, ப்ரபந்நஜநகூடஸ்தர்.... இவைமுதலான திருநாமங்களும் இவர்க்குள்ளன. ஆழ்வார்களுள் இவர் ஐந்தாமவராகத் தோன்றினரெனினும் வைபவவிசேஷங்களினால் இவரே முதன்மைபெற்றவர். இவர் அவயவியென்றும் மற்றையாழ்வார்கள் இவர்க்கு அவயவபூதர்களென்றும் ஸ்ரீவைஷ்ணவபரமாசார் யர்களால் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஒரு காலவிசேஷத்தில் திவ்வியப் பிரபந் தங்களெல்லாம் லோபமடைந்திருக்கையில், ஆசார்யபரம்பரையில் தலைவரான ஸ்ரீமந்நாத முனிகள் இவ்வாழ்வார் விஷயமாக மதுரகவிகள் அருளிச் செய்திருந்த *கண்ணிநுண்சிறுத்தாம்பு பிரபந்தத்தை நியமத்துடன் ஜபித்து யோகதசையிலே இவரை ஸாக்ஷாத்கரித்து இவர் முகமாகவே நாலாயிரதிவ்யப் பிரபந்தங்களையும் உபதேசிக்கப் பெற்றார்; ஆனதுபற்றியே இவருடைய வாழித்திருநாமத்தில் "நாத னுக்கு நாலயிரமுரைத்தான்வாழியே" என்று அநுஸந்தானம் செய்யப்படுகின்றது. உலகில் பயிர்செய்பவன் தான் செய்யும்பயிர் பழுதுபட்டாலும் சோம்பிக் கைவாங்காமல் பின்னையும் க்ருஷியையே பண்ணுமாபோலே கல்பந்தோறும் ஜகத்ஸ் ருஷ்டியைப் பண்ணிப் போராநின்ற எம்பெருமான் அந்த ஸ்ருஷ்டி ஸபலமாகா மலிருந்தும் சிறிதும்விரக்தியடையாமல் என்றேனுமொருநாள் பலிக்கவேபலிக்கு மென்று உகந்து ஸ்ருஷ்டியையே பண்ணிக் கொண்டுவந்தும், படைத்த அந்த ஜகத் தில் அநுப்ரவேசித்தும், அறியவேண்டு மர்த்தங்களையெல்லாம் அறிவிக்குமதான சாஸ்த்ரங்களையுபதேசித்தும், *உறங்குவான் போல் யோகு செய்தபெருமான்* என்கிறபடியே நித்ராமுத்ரையாலே ஜகத் ரக்ஷண சிந்தைபண்ணியும், சிந்தித்தவுபா யத்திற்குத் தகுதியாக *மனிசரும்மற்றும் முற்றுமாய் மாயப்பிறவி பிறந்த* என்கிற படியே மநுஷ்யாதி யோனிகளிலே கண்காணவந்து பிறந்தும் 'எனக்கு அடிமை யாவாருண்டோ' என்று இதுவேகாரியமாகத் தேடித்திரியா நின்றான். அந்தோ ஒருவரும் அடிமைக்கிசைந்துவந்து அவனுடைய க்ருஷியை ஸபல மாக்கிற்றிலர்.! சிற்றின்பங்களிலே ஆழ்ந்து அழுந்திவருந்துவதே உலகவியற்கையாக இருந்தது.

இவ்வுலகவியற்கையைமாற்றி ஸம்ஸாரி சேதநர்களைத் தன்பக்கலில் ஈடுபடுத்துவதற்குத் தன்னாலாகாதென்றும், ம்ருகத்தைக் கொண்டே ம்ருகத்தைப் பிடிப்பது போல ஸம்ஸாரிகளி லொருவரைக் கொண்டே ஸம்ஸாரிகளை வலைப்படுத்திக்கொள்ள வேணு மென்றும் நிச்சயித்து, அப்படிப்பட்ட அதிகாரியைத் தேடுகையில், *அன்பொடு தென் திசைநோக்கி* என்கிறபடியே தனது அன்பார்ந்த நோக்குக்குப் பள்ளமடையான தென் திசையிலே இவ்வாழ்வார்மேலே தன்னுடைய கடாக்ஷாம்ருத தாரையைப் பெருகவிட்டான். இதனை இவ்வாழ்வார்தாமுமறிந்து தமது முதற் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம்" என்கிற பாசுரத்தினால் வெளியிட்டார்.

109. அந்த திவ்ய கடாக்ஷமடியாகத் தோன்றின இவ்வாழ்வார்க்கு அளவு கடந்த அதிசயங்கள் அமைந்தன. உபய விபூதியிலு மடங்காத பெருமை வாய்ந்த பரப்ரஹ்மத்தைத் தம்முடைய ஹ்ருதய ஏக தேசத்திலே யடக்கி 'புவியுமிரு விசும்பும் நின்னகத்த, நீ என் செவியின் வழி புகுந்து என்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார்? ஊன் பருகுநேமியாய்! உள்ளு." (பெரிய திருவந்தாதி) என்கிற பாசுரத்தினால் எம்பெருமானோடே போராடும்படியான பெருமை பெற்றார்; (அதாவது) பிரானே! நீ பரப்ரஹ்ம மென்று பேர் சுமக்கின்றாயே, இது உனக்குத் தகுமா? தன்னைக் காட்டிலும் பெரியதொரு வஸ்து வில்லாதபடி தானே மிகப் பெரிதாகவுள்ள வஸ்துவன்றோ பரப்ரஹ்ம மென்னத்தகும்; என் செவிவழியாகப் புகுந்து என்னுள்ளே அடங்கி நிற்கிறாய் நீ; உபய விபூதிமானான உன்னையு மடக்கிக் கொண்டிருக்கிற நானன்றோ பெரியவன்; என்னுள் அடங்கி நிற்கிற நீ பெரியவனாகத் தகுமோ? என்று கேட்டால் விடை யிறுக்க வல்லமை யில்லை யாயிற்று எம்பெருமானுக்கு. நாமெல்லாரும் கூட பகவானை ஹ்ருதயத்தில் அடக்கிக்கொண்டுதானிருக்கிறோ மென்று ஒவ்வொருவரும் நினைத்துக் கொள்ளலாமானாலும் "கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ் சிவந்து கனிந்து, உள்ளே வெண்பலிலகுசுடரிலகு விலகு மகர குண்டலத்தன், கொண்டல் வண்ணன் சுடர்முடியன் நான்குதோளன் குனி சார்ங்கன், ஒண் சங்கதை வாளாழியா னொருவன் அடியேனுள்ளானே" [திருவாய் மொழி 8—8—1.] என்னும்படியும் *வெள்ளைச் சுரிசங்கொடாழியேந்தித் தாமரைக் கண்ணனென்னெஞ்சினூடே, புள்ளைக் கடாகின்ற வாற்றைக்காணீர் என் சொல்லிச் சொல்லுகேன்* [7—3—1.]என்னும் படியும் இவர் திருவுள்ளத்தே! எம்பெருமான் அடங்கி நிற்குந் தன்மை லோக விலக்ஷணமன்றோ.

110. இவ்வாழ்வாருடைய த்யானச்லோகமாக வழங்கிவருகின்ற

*யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்
நாராயணோ வஸதி யத்ர ஸசங்கசக்ர:,
யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ராஸ்
தஸ்மை நமோ வகுளபூஷணபாஸ்கராய. *

என்கிற ச்லோகம் மிக அற்புதமானது. நம்மாழ்வார் இவ்வுலகின் அகவிருளை அகற்றத் தோன்றிய விலக்ஷண ஸூர்யன். எல்லாருங் கண்ட ஸஹஸ்ரகிரணனான ஸூர்யன் தனது ஆயிரங் கிரணங்களினாலும் புறவிருளைமட்டும் போக்குகின்றான்; இந்த வகுள பூஷணபாஸ்கரர் தமது ஆயிரம் பாசுரங்களினாலும் உலகத்தின் அகவிருளையும் போக்குகின்றார். ஸூர்யன் * த்யேயஸ் ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட:, கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ ஹாரீ ஹிரண்மயவபுர் த்ருதசங்கசக்ர:* என்று உலகமெங்கும்

ஸுப்ரஸித்தமாக அந்தணர் யாவருமநுஸந்திக்கின்ற ச்லோகத்தின் படியே திவ்யாபரண திவ்யாயுத பூஷிதனான ஸ்ரீமந்நாராயணன் தன்னிடத்தில், நித்ய வாஸஞ்செய்யப் பெற்றவன்; இந்த வகுளபூஷண பாஸ்கரரும் * கண்கள் சிவந்து* என்று கீழேயெடுத்துக் காட்டிய பாசுரத்தின்படியே அப்படிப்பட்டவர். [யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ரா;] சிலேடையாக அமைக்கப்பட்டதிது; வேதப்ரதிபாத்யமான ஸூர்ய மண்டலத்தை அந்தணர்கள் ஸந்த்யா வந்த நக்ருத்யத்தினால் முச்சந்தியும் தொழுகின்றனர்; மண்டல மென்று திருவவதாரஸ் தலத்திற்கும் பெயர்; ச்ருதியென்று காதுக்கும் பெயர்; திருக்குருகூர் என்றோ ஆழ்வார் திருநகரியென்றோ காதில் விழுந்தவாறே ஸகலபக்த ஜனங்களும் மத்தகத் திடைக் கைகளைக் கூப்பிநிற்பர். ஆக இவ்வகைகளாலே உள்ளபடி ஸூர்யனென்றே நிரூபிக்கத் தகுந்தவர் நம்மாழ்வார்.

*111.* இவ்வாழ்வாருடைய திருவவதாரத்தை மஹர்ஷிகளும் தங்களுடைய புராண நூல்களில் ஸூசிப்பித்திருக்கின்றார்கள். எங்ஙனே யென்னில்; ஸ்ரீ பாகவதத்தில் பதினோராம் ஸ்கந்தத்தில் ஐந்தாவது அத்யாயத்தில் முப்பத் தெட்டாவது ச்லோகம் தொடங்கி ஸ்பஷ்டமாகவே காணலாம்; *க்ருதாதிஷு நரா ராஜந் கலௌ இச்சந்தி ஸம்பவம், கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா: *....த்ரமிடேஷு ச பூரிச: தாம்ரபர்ணீ நதீ யத்ர* என்பவை முதலான ச்லோகங்கள் குறிக்கொள்ளத் தக்கவை. க்ருதயுகம் முதலான மூன்யுகங்களில் தோன்றியிருந்த சில மனிசர்கள் கலியுகத்தில் அவதரிக்க வேணு மென்று ஆசை கொண்டிருந்தார்கள். அவர்கள் ஸ்ரீமந் நாராயணனையே பரதெய்வமாகக் கொண்டவர்களாய்க் கலியுகத்தில் அவதரிக்கப் போகிறார்கள் ஏதோ சில சில இடங்களில் அவதரிப்பர்கள். தமிழ்நாடுகளிலோ வென்னில் பெரும் பான்மையாக அவதரிப்பர்கள். தாமிரபர்ணி, க்ருதமாலை, பாலாறு; காவேரி என்னு மிப் புண்ணிய நதிகள் எவ்விடங்களில் பெருகுகின்றனவோ அவ் விடங்களில் [அவற்றின் கரையிலே] அவதரிப்பர்கள். —என்று இந்த ச்லோகங்களில் கூறப்பட்டுள்ளது. இந்த நதிகளை யெடுக்கும்போது தாமிரபர்ணி நதியை முந்துற முன்னம் எடுக்கையாலே நம்மாழ்வாருடைய திருவவதாரமே மஹர்ஷிகளால் முக்கியமாகக் கருதப்பட்டதென்பது வெளிப்படை. ஆழ்வார்களிற் சிறந்த நம்மாழ்வாரும் ஆசாரியர்களிற் சிறந்த மணவாளமாமுனிகளும் தாமிரபர்ணிக்கரையில் திருவவதரித்த மஹா புருஷர்களன்றோ.

*112.* இவ்வாழ்வாரை ஸாக்ஷாத் பகவதவதாரமேயாகவும் கொள்வர். பகவான் க்ருதயுகத்தில் தத்தாத்ரேயனும் பரசுராமனுமாய் ப்ராஹ்மண குலத்தில்தோன்றினன்; அவனே அடுத்த த்ரேதாயுகத்தில் க்ஷத்ரியனான தசரத சக்கரவர்த் திக்குப் பிள்ளையாய்த் தோன்றினன்; அவனே த்வாபரயுகத்தில்—வைச்யப்ராயரான வஸு தேவர்க்கும், பசுரக்ஷணத்தாலே ஸாக்ஷாத் வைச்யரான நந்த கோபர்க்கும் பிள்ளையாய்த் தோன்றினன்! இப்படி யுகக்ரமத்தில் வர்ணக்ரமமாக அவதரித்த பரம புருஷன் நான்காவது யுகமான இக்கலியுகத்தில் நான்காவது வருணத்திலே அவ தரிக்க வேண்டி ஆழ்வாராக அவதரித்தனனோ! என்று சங்கிக்க ஔசித்யமுண்டு. வேதங்களைப் பரிஷ்கரிப்பது முதலிய காரியங்களுக்காக வியாஸர் முதலானரிடத்தில் ஆவேசித்தாப்போலே த்ராவிட வேத ப்ரவர்த்தநார்த்தமாக இவர்பக்கல்ஆவேசித்த படியோ! என்றும் சங்கிப்பர்கள், இவ்விபூதியைத் திருத்துகைக்காக ஈச்வரனுடைய நியமனத்தினால் நித்ய முக்தர்களிலே யொருவர் வந்து அவதரித்தபடியோ! என்றும் சங்கிப்பர்கள். இன்னமும் சில முக்கியமான பெருமைகளைக்கேளீர்.

113. மஹர்ஷிகளென்று கொண்டாடப்படுகிற வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளிற் காட்டிலும் ஆழ்வார் மிக்க மேம்பாடு உற்றவர்; அவ்விருடிகள் கனி காய் கிழங்கு சருகு காற்று தண்ணீராகிய இவற்றையே தாரக போஷக போக்யங்களாகக் கொண்டிருந்தார்கள். *ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ண த்ருஷ்ணா தத்வமிவோதிதம்* என்று பட்டர் அருளிச் செய்தபடி எம்பெருமான் விஷயமான காதலே வடிவெடுத்தவரான ஆழ்வாரோ வென்னில் * உண்ணுஞ்சோறு பருகுநீர்த் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன் * என்று தாமே யருளிச்செய்தபடி தாரக போஷக போக்கியங்களெல்லாம் கண்ணனான எம்பெருமானே யாயிருப்பர். ரிஷிகளின் சரித்திரங்களைக் காணும்போது அவர்கள் ஸம்ஸாரப் பற்று அறுதவர்களென்பது விளங்கும். வஸிஷ்ட பகவான் புத்திரனிறந்த வருத்தத்தினால் மரணத்தை விரும்பி மலையிலேறி விழுவது, நெருப்பிலே குதிப்பது. கழுத்திலே கல்லைக் கட்டிக்கொண்டு கடலிலே விழுவது ஆகவிப்படி யெல்லாம் தடுமாறினா ரென்றும், வேதவ்யாஸ பகவான் புத்திரவியோகம் பொறுக்க மாட்டாமல் புத்திரனே! யென்று வாய்விட்டுக் கூப்பிட்டு அழுதுகொண்டு காணப் பெறாமையால் அலமந்து திரிந்தாரென்றும் கதைகள் காண்கின்றன. ஆழ்வாரோ வென்னில், எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் கண்ணுங் கண்ணீருமாய் * எங்கே காண்கேனின் துழாயம்மான் தன்னை * என்று கடலும் மலையும் விசும்பும் துழாவி அலமந்து *சிந்தை கலங்கித் திருமாலென்றழைப்பதே போதுபோக்காயிருந்தவர்.

114. ரிஷிகளின் அத்யவஸாயத்திற் காட்டிலும் ஆழ்வாருடைய அத்யவஸாயம் பரம விலக்ஷணமாயிருக்கும். எம்பெருமானைப் பெறுவதே பேறு என்றும், அதற்குக் கர்ம ஜ்ஞாநபக்திகளே உபாயமென்றும் இந்திரன் முதலிய தேவதைகளுக்கு அந்தர்யாமியான ஈச்வரனே உத்தேச்யனாகையாலே அந்தத் தேவதைகளும் அநுவர்த்திக்கவுரியர் என்றும் இப்படி ரிஷிகள் பேசியுள்ளார்கள். ஆழ்வார் அருளிச்செய்வதோ வென்னில், கைங்கர்யமே புருஷார்த்தமாகவும், அதனைப் பெறுவிப்பது ப்ரபத்தியேயாகவும், இதர தேவதைகள் அநுவர்த்திக்கத் தகாதவராகவு மாயிற்று. ரிஷிகள் இயற்றிய நூல்களிற் காட்டிலும் ஆழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திவ்யப்பிரபந்தங்களுக்கு நெடுவாசியுண்டு ;— வால்மீகி மஹர்ஷியானவர் ராமகதையைச் சொல்லுவதாக ராமாயணமென்று தொடங்கி, கங்கையின் உற்பத்தி ஸுப்ரஹ்மண்யனுடைய உற்பத்தி புஷ்பகவர்ணநம் முதலான கிளைக் கதைகளைப் பரக்கப்பேசி வாக்கில் அசுத்தி படைத்தார். வேதவ்யாஸர் மஹாபாரதத்தை * நாராயணகதை யென்பதாகத் தொடங்கி பீஷ்மர் முதலான பற்பலருடைய உத்பத்தி ப்ரகாரங்களை விரிவாகப் பேசுகையாலும், "பூசல்பட்டோலை" [யுத்தபுஸ்தகம்] என்னும்படி பாரதப்போர் வகைகளையே பரக்கநின்று வருணித்தபடியாலும் அஸத்கீர்த்தநத்திலே மிகவும் பரந்து வாக்கை அசுத்தமாக்கிக் கொண்டார். இப்படிப்பட்ட அவத்யங்களில் ஏக தேசமும் ஆழ்வாரருளிச் செயலில் இடம்பெற்றிருக்கவில்லை. "மாற்றங்களாய்ந்து கொண்டு மதுசூத பிரானடிமேல்" என்று தாமே பணித்தபடி எம்பெருமான் விஷயமல்லாத ஒரு சொல்லும் கலசாதபடி அத்தனையும் பகவத் விஷயமேயாக அருளிச் செய்த பாசுரங்களே மலிந்திருக்கும்.

115. இவரது பாசுரங்களின் பெருமையைப் பற்றிக் கம்பர் சடகோபரந்தாதியில் கூறியுள்ள செய்யுள்களில் ஒன்று கேளீர் :—

" அந்தமிலா மறையாயிரத் தாழ்ந்த வரும் பொருளைச்
செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும்
தந்தம்விழாவுமழகு மென்னும்? தமிழார்கவியின்
பந்தவிழாவொழுகுங் குருகூர் வந்த பண்ணவனே!" என்பதாம்.

116. வேதப்பொருள்களையே நிரம்பக்கொண்ட ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் அவதரிக்க வில்லை யென்றால் கோவில்களையும் உத்ஸவங்களையும் கேட்பாரார்? என்னுங் கருத்துப்பட அமைந்துள்ள இப்பாசுரத்தின் சுவை விலக்ஷணமானதே. சைவ சமயத்திலும் தேவாரம் முதலியன தோன்றியிருந்தாலும் சிவாலயங்களில் அவற்றிற்கு ஒரு மதிப்பு கொடுக்கப் பட்டிருக்கவுமில்லை, உபநிஷத்துக்களின் அர்த்தங்களை நிர்வஹிக்குந் திறத்தில் அவற்றைத் துணைகொள்வாருமில்லை. ப்ராஹ்மண பரிக்ரஹமும் வித்வத் பரிக்ரஹமும் அற்றவையன்றோ அவை. நமது ஸம்ப்ரதாயத்தில் அப்படியன்றிக்கே நமது பூருவாசாரியர்கள் யாவரும் தென்மொழி வேதமாகிய திவ்யப்ரபந்தங்களை வலக்கண்ணாகவும், வடமொழி வேதத்தை இடக்கண்ணாகவு மன்றோ கொண்டிருந்தார்கள். கூரத்தாழ்வான் ஆழ்வார் விஷயமாக அருளிச்செய்த *த்ரைவித்யவ்ருத்தஜுஷ* என்ற ச்லோகமும் *பக்திப்ரபாவபவதத்புத* என்ற ச்லோகமும் அமைந்திருக்கு மழகு நெஞ்சால் நினைப்பரிதே. [அவ்விரண்டு ச்லோகங்களும் ஸ்ரீ வைகுண்டஸ்தவத்தின் தொடக்கத்தில் காணத்தக்கன] ஆழ்வாரைத் துதிப்பதற்கென்று தோன்றிய இந்த ச்லோகங்க ளிருக்கட்டும்; எம்பெருமானை யநுபவித்துக்கொண்டு போம்போதும் ஆழ்வாருடைய ஞாபகமேயன்றோ ஆழ்வான் பட்டர் முதலானார்க்கு இடையறுமலிருப்பது. அதிமாநுஷஸ்தவத்தில் * ஸ்ரீமத் பராங்குச முநீந்த்ரமநோநிவாஸாத் * என்ற ச்லோகமும், வரதராஜஸ்தவத்தில் *ஆம்நாயாநாம் யதபிச சிரோ யச்சமூர்த்தா சடாரே:* என்ற ச்லோகமும், ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * வடதள....கமலாஸ்தந சடகோபவாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்* என்ற ச்லோகமும் இவைபோல்வன பலவும் உயிரையுருக்கியுண்ணுமே. .... .... .... .... *

# குலசேகராழ்வார் பெருமை

—✶✶—

117. இவ்வாழ்வார் சக்ரவர்த்தி திருமகனை பெருமாளைப் போலவே க்ஷத்ரிய வம்சத்திலே அவதரித்துப் பெரியது சிறியதை நலியாதபடி செங்கோல் செலுத்திப் பரமோதாரரா யெழுந்தருளியிருந்தபடியால் குலசேகரப் பெருமாள் என்றும் போற்றப்பெற்றார். இவ்வாழ்வார் எம்பெருமானால் மயர்வற மதிநல மருளப்பெற்று எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபவாதிகளை ஸாக்ஷாத்கரித்து வேதவேத்யனான ஸர்வேச்வரன் சக்ரவர்த்திக்குப் புத்ரனாய் அவதரித்தாப்போல் வேதமும் வால்மீகி முகத்தில் நின்றும் ராமாயணமாக அவதரித்திருக்கின்றமையாலும் "கற்பாரிராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ" என்றும், "மனத்துக்கினியான்" என்றும் சொல்லப்படுகிற ஸ்ரீ ராம வ்ருத்தாந்தத்தைக் கேட்டுப் போராநிற்க, "சதுர்தச ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீம கர்மணாம், ஏகச்ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி" என்கிற ச்லோகத்திற்கு இளைய பெருமாளைப் பிராட்டிக்குத் திருமேனிக் காவலாக வைத்துவிட்டு தருமாத்மாவான பெருமாள் தாம் ஒருவராய் அதிபயங்கரமான க்ருத்யங்களைச் செய்யும் ராக்ஷஸர்களும் அதிலும் பதினாலாயிரவர்களுமான கரதூஷணாதிகளோடு யுத்தத்திற்கு எழுந்தருளினார்; அங்கு எவ்வாறு முடியுமோ? என்று ருஷி வருந்துகிறான் - என்று அர்த்தம் சொல்லக்கேட்டவாறே பெருமாளிடமுள்ள ப்ரேமாதிசயத்தாலே கலங்கி வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வாரில்லாத குறை தீர்க்கத் தாம் சதுரங்கபலத்தோடு புறப்பட்டு எழுந்தருளா நிற்க, இவருடைய கலக்கத்தைத் தவிர்ப்பிக்க மந்திரிகள் சில வைஷ்ணவோத்தமர்களை எதிரே வரவிடுத்து அவர்களின் வாயிலாய், "தம்

த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம்'' என்கிற ச்லோகத்தை வ்யாக்யாநிக்கச் செய்ய அவர்களும் ''பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும் தாம் ஒருவராகவே நிரஸித்து ஆச்ரமம் எழுந்தருளா நின்ற பெருமாளின் வீரத்திற்குகந்து ஜனககுல ஸுந்தரியான பிராட்டி பர்த்தாவான பெருமாளை ஆலிங்கனம்பண்ணி ஆச்வஸிப்பித்தாள்'' என்று சொல்லக் கேட்ட ஆழ்வாரும் அதிஸந்துஷ்டராய் மீண்டு எழுந்தருளினார். அப்பால் மந்திரிகள் இவர்க்கு ஸ்ரீ வைஷ்ணவ ஸஹவாஸத்தாலன்றோ இவ்வாறு கலங்கும்படி ஏற்படுகிறது என்று கருதி அவர்களின் ஸஹவாஸத்தை ஒழிக்க உபாயம் தேடி திருவாராதனப் பெருமாளின் ரத்நஹாரமொன்றைக் களவு செய்து வைஷ்ணவர்கள் அபஹரித்தார்கள் என்று பழியிட, பரஞான பரமபுருஷனிடத்தில் பக்தி பண்ணும் பரம பாகவதோத்தமர்கள் பர (அந்யர்களின்) வஸ்துவை ஆசைப் படார்கள் என்று ப்ரதிஜ்ஞை பண்ணிப் பாம்புக்குடத்தில் கையிடுவேன் என்று கையிட, மந்திரிகளும் இவருடைய அத்யவஸாயத்தைப் புகழ்ந்து தாங்கள் செய்த அக்ருத்யத்தை விண்ணப்பம் செய்து ஆரத்தை ஆழ்வாரிடம் ஸமர்ப்பித்தார்கள். அப்பால் ஆழ்வாரும் இத்தீயர்களுடன் இவ்வரசாளும் பெருமையை வெறுத்து நல்லார்கள் வாழும் நளிரரங்கமாகிய திருவரங்கம் திருப்பதி சென்று திருக்காவேரி திரைக்கையால் அடிவருடத் திருவனந்தாழ்வான்மேல் திருப்பள்ளிகொண்ட திருமேனியம்மானைக் கண்ணாரக்கண்டு வாயாரப் புகழ்ந்து அநுபவித்து அவ்வநுபவ பரிவாஹ ரூபமாகப் பெருமாள் திருமொழி என்கிற திவ்யப்ரபந்தத்தை அருளிச் செய்து இவ்வுலகை வாழ்வித்தருளினார். .... .... .... *

---

# பெரியாழ்வார் பெருமை

-(:o:)-

*118.* இவ்வாழ்வார் பாண்டிய நாட்டில் வில்லிபுத்தூரில் ஆனிமாதத்து ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் வேயர் குலத்திலவதரித்து விஷ்ணுசித்த ரென்று திருநாம முடையவராய் வடபெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தால் எம்பெருமானுக்குத்தொண்டு பூண்டு அமுதமுண்கையே இயல்வாகவுடையராய், 'எம்பெருமான் திருவுள்ளத்துக்கு எந்த கைங்கரியம் உகப்போ, அதுவே நாம் செய்யத்தக்கது என்று உறுதிகொண்டு ஆராய்ந்து பார்த்தவளவில், ஸ்ரீ கிருஷ்ணாவதார பகவான் கம்ஸனுக்குப் பணிசெய்துகொண்டிருந்த மாலாகாரருடைய மனையிலே எழுந்தருளிப் பூமாலையை இரந்து பெற்று அணிந்துகொண்டா னென்கிற கதையை அநுஸந்தித்துப் புஷ்பம் ஸமர்ப்பிக்கையே எம்பெருமான்றனக்கு உவப்பு' என்று நிச்சயித்துத் திருநந்தவனஞ் செய்து வடபெருங்கோயிலுடையானுக்குத் திருமாலை கட்டிச் சாத்திக்கொண்டிருந்தார்.

*119.* இங்ஙனிருக்கையில் பாண்டிய குலத்திற்பிறந்த ஸ்ரீ வல்லபதேவ னென்னு மரசன் மதுரையில் தர்மிஷ்டனாய் அரசாட்சி புரிந்து கொண்டிருக்குங் காலத்தில் ஒரு நாளிரவில் நகர சோதனை செய்து திரியும்போது ஒரு தெருத் திண்ணையின் மேல் ஒருவன் படுத்திருக்கக்கண்டு அவனை யெழுப்பி 'நீ யார்' என்று கேட்க, 'நான் ஒரு பிராமணன்; கங்கை நீராடி மீண்டு வருகிறேன். என்று அவன் சொல்ல;'உனக்கு ஏதாவது நீதி தெரிந்திருந்தால் சொல்லு பார்ப்போம்' என்று அரசன் சொல்ல; அந்த அந்தணன்—* வர்ஷார்த்தமஷ்டௌ ப்ரயதேத மாஸாந் நிசார்த்தமர்த்தம் திவஸம் யதேத. வார்த்தக்யஹேதோர் வயஸா நவேந பரத்ரஹேதோரிஹ ஜன்மனா ச. * என்ற ச்லோகத்தைச் சொன்னான்.

## சரமச்லோக சப்தார்த்த நிரூபணம்

304. சரமச்லோகமென்பதற்குக் கடைசியான சுலோகமென்று பொருள் தோன்றும். கீதையில் கடைசியான சுலோகம் * யத்ர யோகேச்வர: க்ருஷ்ண:... த்ருவா நீதிர் மதிர் மம* என்பதேயொழிய * ஸர்வதர்மாநித்யாதி ச்லோகமன்று. எழுபத்தெட்டு சுலோகங்கள் கொண்ட பதினெட்டாமத்யாயத்தில் அறுபத்தாறும் சுலோகமான விதனை எங்ஙனே சரமச்லோக மென்றார்கள்? என்று சங்கை தோன்றும். கேண்மின்.

305. ஸமாஸங்களில் மத்யமலோபி ஸமாஸமென்று ஒன்றுண்டு; அதனை சாக பார்த்திவஸமாஸ மென்றும் சொல்லுவர்கள். ஒரு அரசன் கீரையிலே மிகவும் ப்ரீதி கொண்டிருந்தான். அவனை சாகப்ரிய பார்த்திவனென்ன வேண்டி சாக பார்த்திவனென்றே சொல்லிவிடுவதுண்டு. " சாகப்ரிய: பார்த்திவ:- சாகபார்த்திவ: " என்பர்கள். இங்கு மத்யமமான ப்ரிய பதம் லோபித் திருக்கையாலே மத்யமலோபி ஸமாஸமென்று சொல்லுவர்கள். அதுபோல இங்கும் " சரமோபாய ப்ரதிபாதக: ச்லோக:- சரமச்லோக: " என்றாகக் கடவது. கர்மஜ்ஞாநாதிகளான உபாயங்களில் சரமமான உபாயம்- சரணாகதி; அதனைத் தெரிவிக்குமதான இந்த ச்லோகம் சரமச்லோக மென்று பேர்பெற்றதாயிற்று.

306. இது, மா சுச: என்று முடிவு பெறுகின்றது. துக்கப்படாதே என்று பொருள் அர்ஜுனன் துக்கப்பட்டதாகத் தெரிந்தாலொழிய இங்ஙனே சொல்ல ப்ரஸக்தியில்லை. அவன் துக்கப்படும்படியாகக் கண்ணன் ஏதாவது சொல்லியிருக்கிறானோ வென்று பார்க்குமளவில் அப்படி யொன்றும் தெரியவில்லை. " கண்ணா! நீ சொன்னது எனக்கு துக்ககரமாக இருக்கிறது" என்று அர்ஜுனன் ஏதேனும் சொல்லியிருக்கிறானோ வென்று பார்த்தால் அதுவுமில்லை. இப்படியிருக்க மா சுச: என்று எது கொண்டு சொல்லிற்று? என்று விமர்சிக்கவேணும்.

### (மா சுச: ) என்றதில் தோன்றும் சோக நிரூபணம்

307. முந்தின சுலோகங்களிலிருந்து ஒருவாறு துக்கத்தை யூஹிக்கலாம்; (61, 62 ச்லோகங்கள்) * ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசே அர்ஜுந! திஷ்டதி * என்றும் * தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேந பாரத* என்றுமுள்ளன; இவற்றால் க்ருஷ்ணனாகியதான் ஈச்வரனன்றுபோலவும், தன்னிற்காட்டில் வேறுபட்ட ஒருவன் ஈச்வரனாகவுளன் போலவும் காட்டுகையாலே, ஐயோ! தன்னையே தஞ்சமாகக் காட்டிக் கொடாமல் இப்படி நம்மை வஞ்சிக்கிறானே! என்று சோக முண்டாகியிருக்கலாம்.

308. அன்றியும், ( சுலோ. 63ல்) * யதேச்சஸி ததா குரு* [ உனக்கு இஷ்டமானபடி செய்] என்று சொல்லித் தலைக்கட்டினானே! ஆதியிலே * யச் ச்ரேயஸ் ஸ்யாத் நிச்சிதம் ப்ரூஹி தந்மே* என்று நாம் பிரார்த்தித்திருக்க, தானே ஒன்றை அறுதியிட்டுச் சொல்லாமல் 'யதேச்சஸி ததா குரு' என்று சொல்லுகிறவி

என்ன வார்த்தை! என்றும் சோக முண்டாகி யிருக்கலாம். முக்கியமான சோகத்தை நம் ஆசாரியர்கள் தெரிவித்தருளுகிறார்கள்;—

309. முமுக்ஷுப்படியில். "கீழே சில உபாய விசேஷங்களை யுபதேசிக்க. அவை துச்சகங்களென்றும் ஸ்வரூபவிரோதிகளென்றும் நினைத்து சோகாவிஷ்டனான அர்ஜுனனைக்குறித்து" என்றுள்ள ஸ்ரீ ஸூக்தி மருமமுணர்ந்துரைத்ததாகும். கீழே பல அத்யாயங்களிலே கருமம் ஞானம் முதலிய சில உபாய விசேஷங்களை மோக்ஷஸாதனமாக விஸ்தரேண உபதேசித்தருளக் கேட்ட அர்ஜுனன் அவை அனுஷ்டிக்க அரிதானவையென்று கண்டான்; எதனாலென்னில், அவை காயக்லேச ரூபமாகையாலும் இந்திரியங்களை வென்றே அவை அனுஷ்டிக்கவேண்டுகையாலே இந்திரிய ஜயம் அரிதாகையாலும், ஸாதனமாக நெடுங்காலம் ஸாதிக்கவேண்டி யிருக்கையாலும், முக்கியமாக பரதந்திரமான ஸ்வரூபத்துக்கு ஸ்வயத்நரூபங்களான இவை விரோதிகளாகையாலும்.

310. ஆக இவற்றாலே எம்பெருமானைப் பெறுவதென்ப தொன்றில்லை: இனி இழந்தே போமித்தனையன்றோ? என்று சோகித்து நின்றான்; அந்த சோகம் தீரவே இதில் சரமோபாயம் விதிக்கப் படுகையாலே இதில் மாசுச: எனப்பட்டது என்பதாக ஆசாரியர்களின் திருவுள்ளம்.

## சரமச்லோகத்தின் திரண்டபொருள்

311. இந்த ச்லோகமானது பூர்வார்த்தமென்றும் உத்தரார்த்தமென்றும் இரண்டு படியாக வகுப்புண்டிருக்கும். இவ்வுபாயத்துக்கு அதிகாரியானவன் செய்ய வேண்டுமது பூர்வார்த்தத்தாலே சொல்லப்படுகிறது;உபாயபூதனான ஸர்வேச்வரன் இவனுக்குச் செய்யுமது உத்தரார்த்தத்தாலே சொல்லப்படுகிறது. அதிகாரியானவன் செய்ய வேண்டுமது இவ்வுபாயத்தை ஸ்வீகரிப்பதேயாகும்; [அதுதான் பூர்வார்த்தத்தால் பிரதிபாதிக்கப்படுகிற தென்க] ஆனால் அந்த உபாய ஸ்வீகாரத்தைமட்டும் சொல்லாதே * ஸர்வதர்மாந்பரித்யஜ்ய* என்று உபாயாந்தரங்களை விடுகையும் சொல்லப்படுகிறதே, அது எதற்காகவென்னில்; அங்கியான உபாய ஸ்வீகாரத்திற்கு அங்கமும் சொல்லப்பட வேண்டுகையாலும் உபாயாந்தர பரித்யாகமே அங்கமாகையாலும் அந்த அங்கத்தோடேகூட விதிக்கிறபடி.

312. ஆசமனம் முதலியவற்றுக்கு அங்கமான கைகாலலம்புகை முதலானவற்றை யொழிய அவை [ஆசமநாதிகள்] அனுஷ்டிக்க வொண்ணாதாப்போலே இங்கும் அங்கமாகச் சொல்லுகிற உபாயாந்தர பரித்யாகத்தை யொழிய சரணவரணம் ஆகாதென்பது தேறிற்று. உபாயாந்தர பரித்யாகமே சரணவரணமாகக் கொள்ளத்தகும். "ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திః ப்ரபத்திః" என்பது பூருவாசாரியர்களின் மருமமானவார்த்தை.

## ஸர்வதர்மாந் என்ற முதற் பதத்தின் விவரணம்

*313.* ஸர்வதர்மாந்' என்பதற்கு ' எல்லா தர்மங்களையும்' என்று பொருள். ஒரு பலனுக்கு ஸாதனமா யிருக்குமது எதுவோ அதுவே தருமமெனப்படுவது. மோக்ஷோபாயங்களை உபதேசித்து வருகிற ப்ரகரணமாகையாலே இவ்விடத்திலுள்ள தர்ம சப்தமானது ஐஹிகமாயும் ஸ்வர்க்காதி ஆமுஷ்மிகமாயு மிருந்துள்ள த்ருஷ்ட அத்ருஷ்ட பலன்களுக்கு ஸாதனங்களானவற்றைச் சொல்லுகையன்றியே பகவத் ப்ராப்தி ரூபமான மோக்ஷபலத்துக்கு ஸாதனமா யுள்ளவற்றைச் சொல்லுகிறது

*314.* அந்த மோக்ஷபலஸாதனங்கள் ச்ருதி ஸ்ம்ருதிகளாலே விதிக்கப்பட்டவையாய்க் கொண்டு அநேகங்களா யிருக்கையாலே (தர்மாந்) என்று பஹுவசநமுள்ளது. அவை எவை யென்னில்; *கர்மணைவ ஹி ஸம்ஸித்திம்* இத்யாதிகளால் ஸ்வதந்த்ர ஸாதனமாகச் சொல்லப்பட்ட கர்மயோகமும், *ஸர்வம் கர்மாகிலம் பார்த்த! ஜ்ஞாநே பரிஸமாப்யதே* என்று சொல்லப்பட்ட கர்ம ஸாத்யமான ஜ்ஞாநயோகமும்; *மந்மநா பவ மத்பக்த:* இத்யாதிகளாலே சொல்லப்பட்ட கர்மஜ்ஞாந ஸஹக்ருதமான பக்தியோகமுமாகிற இவையும், *ஜந்ம கர்ம ச மே திவ்யம்* இத்யாதிகளால் பகவத் ப்ராப்திக்கு ஸாதனமாகச் சொல்லப்பட்ட அவதார ரஹஸ்ய ஜ்ஞானம், *ஏதத் புத்த்வா புத்திமாந் ஸ்யாத் க்ருதக்ருத்யச் ச பாரத* என்றவிடத்துச் சொல்லப்படுகிற புருஷோத்தம வித்யை, * தேசோயம் ஸர்வகாமதுக்* என்று சொல்லும் புண்ய க்ஷேத்ரவாஸம், *ஸர்வபாப விசுத்தாத்மா யாதி ப்ரஹ்ம ஸநாதனம்* என்று பகவத் ப்ராப்தி ஸாதநமாகச் சொல்லப்படுகிற திருநாமஸங்கீர்த்தனம் திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை முதலாக ஸாதநபுத்தியோடு செய்யப் படுமவையும் இங்கு (தர்மாந்) என்பதனுலே விவக்ஷிதங்கள்.

*315.* (ஒரு சங்கை) பஹுவசநமே போதுமாயிருக்க, தர்ம சப்தத்திற்கு விசேஷணமாக ஸர்வசப்தமு மொன்று இருக்கிறதே, இதனால் சொல்லுகிறது என்னென்னில்; பஹுவசநத்தால் சொல்லப்பட்ட அந்தந்த உபாய விசேஷங்களை அனுட்டிக்குமளவில் அவற்றுக்கு யோக்யதாபாதகங்களான ஸந்தியாவந்தந பஞ்ச மஹாயஜ்ஞாதிகளான நித்ய கருமங்கள் ஸர்வ சப்தத்தால் விவக்ஷிதங்களென்க.

*316.* ஆக ஸர்வதர்மாந் என்பதற்குத் தேறின பொருள்யாதெனில்: ச்ருதிஸ்ம்ருதிகளாகிற ப்ரமாணங்களாலே விதிக்கப்பட்டுள்ளவையாய் நித்ய நைமித்திகம் முதலானவற்றை வடிவாக வுடையதான கர்மயோகம் முதலான உபாயங்களை என்றதாயிற்று. [ஸஹஸா இங்கே தோன்றக்கூடிய சங்கைகள் மேலே தொலையும்.]

## பரித்யஜ்ய என்கிற பதத்தின் பொருள்

*317* இனி பரித்யஜ்ய பதத்திற்குப் பொருள் கேண்மின். த்யாகமாவது விடுகை. இவ்விடத்திற் சொல்லுகிற த்யாகமாவது வெறும்விடுகையன்று. கீழ்ச்சொல்லப்பட்ட உபாயங்களின் படியை நன்கு நோக்கி, வெள்ளியல்லாததொரு சிப்பியிலே வெள்ளி யென்கிற புத்தியைப் பண்ணுவாரைப்போலேயும்,ஒரு திக்கிலே போக ஷிரும்பி வேறொரு திக்கை அதுவாக நினைத்துப் போவாரைப் போலேயும் பகவத்

ப்ராப்திக்கு உபாயத்தை விரும்புகின்ற நாம் உபாயமல்லாதவற்றிலே உபாய புத்தி பண்ணினோமே! என்கிற அநுதாப புத்தி விசேஷத்தோடுகூட விடுகை.

318. பரி என்கிற வுபஸர்க்கம் மிகுதிக்கு வாசகமாகி இங்குத் தெரிவிப்பதாவது ப்ரஹ்மஹத்யை ஸுராபானம் முதலிய பாதகங்களையும் மற்றும் நிஷித்தமான வற்றையும்விடுமளவில், அவற்றில் மறுபடியும் அந்வயிப்பதற்குறுப்பான ருசிவாஸனைகள்கூட இல்லாதபடி வெள்கி விடுமாபோலே, உபாயாந்தரங்களை விடுமளவில் மீளவும் அவற்றில் அந்வயம்வாராததபடி விடவேணுமென்று தெரிவிக்கப்படுகிறது.

319. பரித்யஜ்ய என்கிறல்யப்பாலே ஸித்தோபாயத்தைப் பற்றுமளவில் த்யாஜ்யமான உபாயாந்தரங்களை விட்டே பரிக்ரஹிக்க வேணுமென்கிற நியமம் என்னென்னில்; உபாயாந்தரங்களான இவற்றிலே சிறிது அந்வயம் கிடந்தாலும் இவை பேற்றுக்கு ஸாதநமாகாத மாத்திரமன்றிக்கே பேற்றுக்குப் பிரதிபந்தகமாயும் நிற்கும். ஆதலால் விட்டே பற்ற வேணும்.

## ஸாத்ய தர்ம பரித்யாகத்தின் ஆவச்யகத்வ நிரூபணம்

320. இதற்கொரு த்ருஷ்டாந்தமுண்டு; இராவணன் ராமசரங்களாலே மிகவும் நொந்து நிலை கலங்கி எதிரம்பு கோக்கமுடியாமே நின்றான்; அப்போதும் ராமபாணங்கள் மேன்மேலும் விழுந்துகொண்டிருந்தன. தருமயுத்தஞ் செய்யுமிராமன் நாம் அம்புவிடாமலிருக்கவும் தான் அம்புகளை விடுவதற்கு என்ன காரணமென்று இராவணன் சிந்தித்தான்; தன் கையில் வில் இருப்பதுதான் காரணமென்று தெரிந்து கொண்டு பிறகு அந்த வில்லையும் பொகட்டான். அப்போது பெருமாள் பாணப்ரயோகத்தை நிறுத்தி அவனுக்கு விடை கொடுத்தனுப்பினார் என்று ஸ்ரீராமாயணத்தில் சொல்லப் பட்டிருக்கின்றது. இராவணன் பொகட்ட அந்த வில் அவனது கையிலிருந்தபோது எதிரியை வெல்வதற்கு ஸாதநமாகாமலிருந்தவளவேயன்றிக்கே தன்னைப் பெருமாள் வாட்டுவதற்கும் ஹேதுவாயிருந்தது, *கச்சாநுஜாநாமி* [இராவணா புறப்பட்டுப் போ; விடை தருகின்றேன்] என்கிற திருவாக்கு அப்போது அவதரியாமல் வில்லைப் பொகட்ட பின்பே அவதரித்தமையால் அந்த வில்லே இராவணனுக்குக் கால்கட்டாயிருந்ததென்று தெளிவாயிற்று, அதுபோல வேயாம் உபாயாந்தரங்களுமென்க. உபாயாந்தரப்பற்று உள்ளவரையில் பகவதநுக்ரஹம் தான் புகுவதற்கு அவகாசம் பெறாதென்றவாறு.

321. உபாயாந்தரங்களில் அந்வயம் இழவுக்கு உடலாம் என்பதை மற்றொரு த்ருஷ்டாந்தத்தாலும் அறியலாம். தசரத சக்ரவர்த்தியானவன் ஆபாஸமான ஸத்யதர்மத்தைப்பற்றி நின்றமையாலன்றோ பெருமாளோடே கூடி வாழவிருந்த பேற்றை இழந்தான். *ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்கிற ஸித்ததருமமான பெருமாளைப்பற்றி ஆபாஸதர்மமான ஸத்யவசனத்தை தசரதன் விட்டிருக்க வேண்டுமன்றோ. 'முன்பே வரம் கொடுத்துவைத்து இப்போர்தாக மறுக்கவொண்ணாது' என்று ஆபாஸமான (ஸத்ய)தர்மத்தைப்பற்றி நின்றமையாலன்றோ பெருமாளை யிழந்தான். ததிபாண்டன் கிருஷ்ணனை மறைத்துவைத்து இங்கில்லையென்று

யசோதைக்குப் பொய்சொல்லி மோக்ஷம் பெற்றான்; தசரதன் ஸத்யவாதியென்று பேர்பெற்று பேற்றை இழந்தான்.

322. ஆக ஆபாஸமான உபாயாந்தரங்களிலே அந்வயித்து நிற்கையானது *க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்* என்று .ஸநாதனதர்மமான பகவத் விஷயத்தோடே கூடி வாழுகையாகிற பேற்றை இழப்பதற்கு உறுப்பாய்விடும். ஆகவே அவை பரித்யாஜ்யங்களென்னத் தட்டில்லை.

## மாம் என்ற மூன்றாவது பதத்தின் பொருளை விவரித்தல்

323. எல்லாரையும் ரக்ஷிப்பதிலே தீக்ஷிதனாய். உனக்கு இஷ்டமானபடி ஏவிக் காரியம் கொள்ளலாம்படி கையாளாய், ரக்ஷ்யபூதனான உன்னுடைய இசைவு பார்த்து உன் குற்றங்களுக்கு நீ அஞ்சவேண்டாதபடி அவற்றையே பச்சையாகக் கொண்டு உனக்குப் புகலாய், *தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்* என்கிற படியே புருஷகாரம் செய்யக்கடவ பிராட்டியே குற்றத்தைக் காட்டி அகற்றப் பார்க்குமிடத்திலும் விடமாட்டாதே *என்னடியார் அது செய்யார்* என்று மறு தலைத்து ஒருதலைநின்று ரக்ஷிக்குமவனான என்னை யென்றபடி.

324. அவதரித்துக் கண்ணுக்கிலக்காய் அணுகி நிற்கிற விபவரூபனான தன்னை மாமென்று குறிப்பிட்டு வரணியனாகச் சொன்னவித்தாலே - தேச விப்ரகர் ஷத்தாலே காணவும் கிட்டவு மொண்ணாதபடி யிருக்கிற பரவ்யூஹங்களையும், அஸாதாரண விக்ரஹயுக்தமல்லாமல் உபாயாந்தர நிஷ்டர்க்கு உத்தேச்யமா யிருக்கிற அக்நீந்த்ராதி தேவதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது. அவற்றிற் காட்டிலு முண்டான வாசியைக் காட்டுகிறது மாமென்பது. இந்த மாம் என்கிற பதத்திலே ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களான குண விசேஷங்களெல்லாம் விளங்கும், அவையாவன: வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் ஸௌசீல்யமும் ஸௌலப்யமும்.

325. அதர்ம புத்தியாலே ஸ்வதர்மத்தில் நின்றும் நிவ்ருத்தனான அர்ஜுந னுக்கு குற்றம் பாராதே அர்த்தங்களையெல்லாம் அருளிச்செய்கையாலே வாத்ஸல் யம் பிரகாசிக்கிறது. தன்னுடைய பரத்வத்தைப் பலகாலுமருளிச் செய்த மாத் திரமன்றிக்கே அர்ஜுநன் நேரே காணும்படி பண்ணுகையாலே ஸ்வாமித்வம் பிரகாசிக்கிறது. .*ஹேக்ருஷ்ண ஹேயாதவ!* என்று அர்ஜுநன் தானே சொல் லும்படி இவனோடே கலந்து பரிமாறுகையாலே ஸௌசீல்யம் பிரகாசிக்கிறது. இவை யெல்லாவற்றிலும் வைத்துக்கொண்டு மிகவும் அபேக்ஷிதம் ஸௌலப்யமாகையாலே அவதார ப்ரயுக்தமான ஸௌலப்யத்தளவேயல்லாமல் ஸாரதியாயும் நிற்கிற ஸௌலப்யாதிசயம் மாம் என்று உறுத்திக் காட்டப்படுகிறது. குதிரைகளை நடத்து கைக்காகத் திருக்கையிலே பிடித்த உழவுகோலும் சிறுவாய்க்கயிறும் திருமுடியில் ஒன்றும் அணியாமல் நிற்கையாலே சேனைத்துகளாலே புழுதிபடைத்த திருக்குழ லும், சாத்தின சிறு சதங்கையுடனே தேருக்குக் கீழே தொங்கவிட்ட திருவடி களுமாய் நிற்கிற ஸாரதி வேஷத்தை மாமென்று காட்டுகிறான்.

## ஏகம் என்கிற நான்காவது பதத்தின் பொருள் விவரித்தல்

326. இவ்வுபாய விசேஷத்தைச் சொல்லு மிடங்களிலே பல விடங்களிலும் *மாமேவ யே ப்ரபத்யந்தே* என்பது முதலான விடங்களில் அவதாரண ப்ரயோக முண்டாகையாலே உகாரம் போலே இந்த ஏக சப்தமும் ஸ்தான ப்ரமாணத் தாலே அவதாரணமாகிற பொருளைக் காட்டுகிறது. இந்த அவதாரணத்தினல் வ்ரஜ என்று மேலே சொல்லுகிற சரணவரணத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறது. இந்த ஸ்வீகாரமுண்டானல் பேறு; இல்லையாகில் இழவு, என்று அந்வயவ்ய திரேகங்களாலே இதில் ஸாதநத்வபுத்தி நடையாட ப்ரஸக்தி யுண்டாகையாலே இதின் ஸாதநத்வம் அவச்யம் கழிக்கப்படவேணுமன்றோ.

327. அந்வயவ்யதிரேகங்களாலே உபாயமென்று திண்ணமாகத் தோற்றுகிற ஸ்வீகாரத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறபடிதான் எங்ஙனேயெனில்; ஸ்வீகார மானபிறகு இவனுக்கு அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணுகை அவ னாலேயானப்போலே, அதற்கு முன்னம் நேருகின்ற ஸ்வீகாரந்தானும் அவனாலே யுண்டாமது என்பதே பரமார்த்தம். ஆகவே ஸ்வீகாரம் உபாயகார்யமே யொழிய உபாயமன்றென்க. இதுதான் முக்கியமாக நெஞ்சிற் படவேணும்.

328. ஸ்வீகாரம் அவனாலே வருகையாவதென்னென்னில்; கரணகளேபரங்க ளொன்று மின்றிக்கே அசித்துப்போலே கிடக்கிற தசையிலே கரணகளேபரங்களைக் கொடுத்து ஸ்ருஷ்டி பண்ணி *எதிர்சூழல்புக்கு* என்கிறபடியே இவனை அங்கீகரிக்கை க்காக அவன் அநேகாவதாரங்களைப்பண்ணி. அவதரித்த விடங்களிலே ஆச்ரயிப்பதில் ருசிவிச்வாஸங்களை விளைவிப்பதான தன்குணசேஷ்டிதம் முதலியவற்றைப் பிரகா சிப்பித்து இவ்வழியாலே அவன் பண்ணின க்ருஷியாலே பலித்ததன்றோ இந்த ஸ்வீகாரம். ஆகையாலே இது அவனாலே வந்ததென்னத் தட்டுண்டோ? *அதுவுமவன தின்னருளே* என்கிற ஆழ்வார் பாசுரம் காணத்தக்கது. இந்த ஸ்வீகாரத்துக்கும் தானே க்ருஷி பண்ணுவானொருவனாகையாலே அவன் இதுக்காக வன்று நமக்குக் காரியம் செய்கிறது, இது இல்லாமற் போனாலும் இவ்வாத்மாவை உய்விப்பதிலே நோக்குடையனான தானே நம்முடைய இஷ்டப்ராப்தி அநிஷ்ட பரிஹார ரூப மான காரியத்தைச் செய்வனென்று நினைக்கவேண்டும்; இப்படி நினைக்காவிடின் [அதாவது-நம் ஸ்வீகாரமில்லையானாலும் காரியம் செய்வனென்று நினையாதே அவன் காரியம் செய்கைக்கு இதுவும் வேணுமென்று நினைக்குமளவில்] ஸித்தோபாய மானது ஒரு ஸஹாயத்தையும் எதிர் பாராத தென்கிற பெருமை குலைந்ததாகும்.

## சரணம் வ்ரஜ என்றவற்றின் பொருள் விவரித்தல்

329. ஸர்வதர்மங்களையும் விட்டு தன்னையே பற்றச் சொல்லுகிற ப்ரகரண மாகையாலே. கீழோடே சேரவேண்டுகைக்காக சரணம் என்பதற்கு 'உபாயமாக என்பது பொருளாகக் கடவது. 'உபாயமாக நெஞ்சிற்கொள்ளக்கடவாய்' என் பதே (சரணம் வ்ரஜ) என்பதன்பொருளாயிற்று. *சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும்* என்கிறபடியே மனமொழிமெய்கள் மூன்றினாலுமுண்டான ஸ்வீ காரம் அதிகாரபூர்த்திக்கு உடலாகையாலே வாசிகமும் காயிகமும் இந்த ஸ்வீ

ந-10

காரத்திற்கு வேண்டியிருக்கச் செய்தேயும், *ஜ்ஞாநாத்மோக்ஷ மென்கையாலே அவை யிரண்டையு மொழிய மாநஸமான அனுஷ்டான மாத்திரத்தைச் சொல்லுகிறது. ஆக, பூர்வார்த்தத்தால் சொல்லிற்றாயிற்றென்னென்னில்; ஸர்வதர்மாந் என்று த்யாஜ்யத்தைச் சொல்லி பரித்யஜ்ய என்று த்யாக ப்ரகாரத்தைச் சொல்லி மாம் என்று பற்றப்படுமுபாயத்தைச் சொல்லி ஏகம் என்று அந்த உபாயம் இதர நிரபேக்ஷமென்பதைச் சொல்லி; சரணம் வ்ரஜ என்று உபாயஸ்வீகாரம் சொல்லிற்றாயிற்று.

## உத்தரார்த்தத்தை விவரிக்கத் தொடங்குதல்

*330.* பூர்வார்த்தத்தில் அதிகாரி க்ருத்யமன்றோ சொல்லிற்று. உபாய பூதனான தன்னுடைய க்ருத்யம் சொல்லுகிறது உத்தரார்த்தத்தில். அஹம்—எல்லா மறிந்தவனாய் எதுவும் செய்ய வல்லவனாய் சேஷியாகையாலே ப்ராப்தனாயிருக்கிற நான். [த்வா] உன் காரியங்களை அறிகைக்குத்தக்க ஞானமில்லாதவனாய் அறிந்தாலும் செய்து தலைக்கட்டிக்கொள்ளுகைக்கு சக்தியில்லாதவனாய், சக்தியுண்டானாலும் தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்ள உரிமையற்றவனாய், இப்படியிருக்கையாலே ஸர்வ தர்மங்களையும் விட்டு என்னையே உபாயமாகப்பற்றியிருப்பவனான உன்னை யென்றபடி.

*331.* ஸர்வபாபேப்ய:—இஷ்ட விரோதியாயும் அநிஷ்ட ஹேதுவாயு மிருக்குமது பாபம்; மோக்ஷப்ரகரண மாகையாலே எம்பெருமானையடைவதற்கு விரோதிகள் எவையோ அவையே இஷ்ட விரோதிகள். ஆகவே நீ என்னையடைவதற்கு விரோதிகளென்று எந்தெந்த பாபங்களில் நின்றும் பயப்படுகிறாயோ அந்தந்த பாபங்களெல்லாவற்றில் நின்றுமென்றவாறு.

*332* மோக்ஷயிஷ்யாமி—இவற்றில் நின்றும் விடுபட்டவனும்படி பண்ணக் கடவேனென்கை. நானும் இதுக்கொரு முயற்சி செய்ய வேண்டா; நீயும் இதற்கு ப்ரார்த்திக்க வேண்டா: நீ என்னை அடிபணிந்த பெருமையாலே உன்னைக் கண்டு தானே பயப்பட்டு, போனவழி தெரியாதபடி தன்னடையே விட்டுப்போம் அவை என்பது ணிச்சாலே தெரிவிக்கப்படும். 'அஹம் தே ஸர்வபாபாநி நிஹநிஷ்யாமி" என்று சொல்லாமல் " த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று ணிஜந்த ப்ரயோகம் பண்ணினவிதனால் தேறின அர்த்தமிது. பாபமென்று ஒரு வஸ்து கிடக்கிறதன்றே; குப்பையில் ஆமணக்குப்போலேயெழுந்து பாம்புபோலே பிடுங்குவதன்றே பாபமென்பது. சேதநன் பண்ணின கருமங்கள் ஒரு நொடிப் பொழுதில் நசித்துப் போம்; கர்த்தாவான இவன் அஜ்ஞனாகையாலே மறந்து போவான்; ஸர்வஜ்ஞனாய் ஒன்றொழியாமல் நினைத்திருந்து ஸமயங்களிலே தப்பாமல் பலாநுபவம் பண்ணுவிக்கிறவன் ஸர்வேச்வரன். ஆகவே அப்படி அனுபவிப்பிக்கிற என்னுடைய நிக்ரஹ ரூபமாகையாலே அந்த நிக்ரஹபலமாய் வந்தவை நிக்ரஹத்துக்கு ப்ரதிகோடியான அநுக்ரஹத்தை நான் பண்ணினால் பின்னையும் கிடக்குமோ வென்கை.

*333.* நெடுங்காலமாக அப்பாபங்களைக் கண்டு நீ நடுங்கின நடுக்கம்போய் உன்னைக் கண்டு அவை தாம் குடல் கரிந்து நடுங்கும்படி பண்ணக்கடவேன் என்றவாறு. இத்தனை காலமும் நம் காரியத்துக்கு நாம் கடவோமென்று நீ திரிகை

யாலே தன் காரியம் தானே செய்துகொள்கிறுனென்றிருந்தேனத்தனே. எனக்கு நீ சரீரதயா சேஷமென்றறிந்து என்னைச் சரணமடைந்த பின்பு ' உன்னுடைய பாபம் போகைக்கு நீயே முயற்சி பண்ணிக்கொள்' என்று உன்கையிலும் உன்னைக் காட்டித் தரமாட்டேன். என்னுடலானவுன்னுடைய அவித்யையாகிற அழுக்கை சரீரியான நானே போக்கிக்கொள்ளேனே?

### மாசுச: என்றதன் விவரணம்

334. இனி மாசுச: என்றது சோகப்படாதேகொள் என்றபடி. நீ உன் கார்யத்தில் கைவைத்திருந்தாயாகில் ' நம் கார்யத்துக்கு என்செய்வோம்' என்று நீ கரைந்து சோகிக்கலாம்; நான் உன் காரியத்திலே கைவைத்திலேனாகில் " நம் காரியத்தில் இவன் உதாஸீநனுயிருக்கிருனே! நாம் எப்படிஉஜ்ஜீவிக்கப் போகிறேம்" என்று நீ சோகிக்கலாம்; இப்படியல்லாமல் உன்னுடைய ஸ்வரூபத்தை யுணர்ந்து நீ உன் ரக்ஷணகார்யத்திலே கைவைக்காமையாலும் ஸ்வாமியான நான் உன்னுடைய ரக்ஷண கார்யத்திலே ஊன்றிப் போருகையாலும் உனக்கு சோகிக்கைக்கு நிமித்தமில்லைகாணென்று முன்பு சோகித்து நின்ற அவனுடைய சோக நிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கிறபடி. இவ்வளவும் சரமச்லோகார்த்தம் விவரித்தோம்.

335. உபஸம்ஹாரம். ஆக சரமச்லோகத்தின் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று. இதில் உத்தரார்த்தத்திற் காட்டிலும் பூர்வார்த்தத்தில் தான் குறிக்கொள்ள வேண்டிய விஷயங்கள் நிரம்பிக்கிடக்கின்றன. முக்கியமாக இரண்டே விஷயங்களை இங்கு ஸாரமாகத் தெரிவிக்கிறேம். " ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்ற மூலத்தையும் அதன் வியாக்கியானத்தையும் மேலெழப் பார்த்துவிட்டுப் பலர் எல்லாவற்றையும் விட்டுவிட வேணுமென்பதே கீதாசார்யனுடைய திருவுள்ளம் என்று நினைக்கிருர்கள். இது மிகத் தவறான நினைவு. கீதார்த்த ஸங்க்ரஹத்தில் ஆளவந்தார் " நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ:" என்று மிகத் தெளிவாக அருளிச் செய்துள்ளார்.

336. ஆளவந்தார் குர்யாத்என்றுரேயொழிய த்யஜேத்என்னவில்லை. மூலத்தில் த்யஜிக்கச் சொன்னது எது? என்பதையும் ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளார் உபாயதாம் பரித்யஜ்ய என்று. அவை மோக்ஷோபாயம் என்கிற புத்தியை விடச்சொன்னதேயொழிய அவற்றையே விடச் சொன்னதன்று. கர்மஜ்ஞான பக்தி யோகங்களுக்கு உபாயதயா அநுஷ்டானம், ப்ரீத்யா அநுஷ்டாநம் என்று இருவகையுண்டு; ப்ரீத்யா அநுஷ்டானம் தவிர்க்கப்படவில்லை; உபாயதயா அநுஷ்டானம் மட்டுமே தவிர்க்கப்பட்டது. ஏவஞ்ச, புத்தி த்யாகமேயொழிய ஸ்வரூபத்யாகமன்று என்கை.

337. ஸ்வரூபத்யாகமே யென்று கொண்டாலும் குறையில்லை. அப்போதும் புத்தித்யாகந்தான் தேறிநிற்கும். எங்ஙனே யென்னில்; " ஸங்கல்பபேதேந கர்மபேத:" என்பது சாஸ்த்ரந்யாயம். உபாயமென்கிற ஸங்கல்பத்தோடே செய்யும் கருமம் உகப்பேயடியாகச் செய்யும் கருமத்திற் காட்டிலும் வேறுபட்டதா யிருக்கையாலே முந்தின கருமத்திற்கு ஸ்வரூபத்யாகமேயாகும்.

338. பட்டர் ஸ்ரீ ரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் 'நித்யம் காம்யம் பரமபி கதிசித் த்வய்யத்யாத்ம ஸ்வமதிபிரமமா:, ந்யஸ்யா ஸங்கா விதததி விஹிதம் ஸ்ரீ ரங்கேந்தோ! விதததி நச தே" என்றருளிச் செய்த சுலோகம் இங்கு அநுஸந்திக்கத் தகும். "விஹிதம் விதததி, ந விதததி ச" என்று இரண்டையும் சொல்லி வைத்ததை நிர்வஹிக்குமிடத்து இங்கே நாம் செய்த நிருபணமே தேறி நிற்கும்.

339. கீழே உதாஹரித்த கீதார்த்த ஸங்க்ரஹச்லோகத்தில் "உபாயதாம் பரித்யஜ்ய" என்று ஸுஸ்பஷ்டமாக ஆளவந்தார் அருளிச் செய்திருக்கவும், சிலர் "உண்மையாக உபாயமாயிருக்குமவற்றிலே உபாயத்வ புத்தியை விடுகையென்று ஒன்றுண்டோ?" என்று சோத்யம் செய்து கொண்டேயிருப்பர்கள். அவர்களை கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையிலே வேதாந்த வாசிரியர்தாமே நன்கு நிரஸித்துள்ளார். அவ்விடத்துப் பங்க்திகளை அப்படியே யெடுத்துக்காட்டுகிறோம்.

340. "முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தர பாவி பலஸாதநத்வாநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மேக்ஷோபாய தாபுத்திரபி ஸ்யாதிதி பாவ: அந்ததஸ் தைஸ்தை ராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ரோபாய: ...... அதஸ் தஸ்மிந்நேவ *மாமேகம் சரணம் வ்ரஜேதி வக்தரி உபாயதாபுத்தி: கார்யா என்பன. இங்ஙனேவிவரித்தருளின அர்த்தத்தையே "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்று ரஹஸ்யத்ரயஸாரத்திலும், "இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணம்" என்று ந்யாய ஸித்தாஞ்ஜனத்திலும், "த்வதுபாயதிரபிஹித ஸ்வோபாய பாவாஸ்து மே" என்று ந்யாஸதிலகத்திலும் மற்றும் பல விடங்களிலும் ச்லோகபத்தமாக்கி வைத்தருளினர். தேசிகர் .... .... 5

நவரத்ந நவநிதியில் ஐந்தாவதுநிதி சரமச்லோகார்த்த ஸாரம் முற்றிற்று.

## ஆறுவது நி சேதநஸ்வரூப நிருபணஸாரம்.

### தத்வத்ரயக்ரந்தத்தின் பெருமை

341. நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் மஹோபகாரகர்களாகத் திருவவதரித்தருளின ஆசார்யர்களில் பிள்ளை லோகாசார்யர் ப்ரதாந பரிகணிதராவர். இவ்வாசிரியர் ஸர்வஜ்ஞராக எழுந்தருளியிருந்தது பெரிதன்று; பரமகாருணிகராயெழுந்தருளியிருந்ததே இவர்க்குத் தன்னேற்றம். ஸம்ஸாரிகளை முமுக்ஷுக்களாக்கவும், முமுக்ஷுக்களை முக்தப்ராயர்களாக்கவும், முக்தப்ராயர்களை முக்தர்களாக்கவும் வல்ல திவ்ய ஸூக்திகளை யருளிச்செய்தவர் இவ்வாசிரியரொருவரே யாவர். இவருடைய தனியனில்தான் "ஸம்ஸாரபோகி ஸந்தஷ்ட ஜீவஜீவாதவே நம:" என்கிற விலக்ஷணமான வாக்விந்யாஸம் அமையக் காண்கிறோம். ஸம்ஸாரமாகிற கொடிய ஸர்ப்பத்தினால் கடியுண்ட சேதநர்கள் உஜ்ஜீவிக்கப் பெறவேணுமாகில் பிள்ளை லோகாசாரியருடைய ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டே உஜ்ஜீவிக்கவேணுமென்று பூருவர்கள் அறுதியிட்டிருந்தார்கள். அரிய பெரிய ரஹஸ்யார்த்தங்களை ஏடுபடுத்தி வைத்து உலகத்தை வாழ்விக்க முந்துற முன்னம் ப்ரவர்த்தித்தவர் இவ்வாசிரியரே. இவர்தாம் பதினெட்டு ரஹஸ்ய க்ரந்தங்களை இட்டருளினர்.

342. ஸூத்ரம் போன்ற இவ்வாசார்ய ஸூக்திகளின் ஆழ்பொருளைத் தேனும் பாலுமமுதுமாக வெடுத்துரைத்துப் பரமோபகாரம் செய்தருளினவர் மணவாள மாமுனிகள். விசதவாக் சிகாமணிகளென்னும் விருது அவரொருவர்க்கே ஏற்கும் அவருடைய அமுதமென்மொழிகளான வியாக்கியானங்கள் அவதரித்திராவிடில் பிள்ளை லோகாசார்யருடைய பரம கருணையும் பயனற்றதாகும். உபயவேதாந்த ஸாரார்த்தங்களை நாம் மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களிலிருந்துதான் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியும். நமக்கு, திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகமாகிற ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தஜ்ஞானம் எப்படி ஆவச்யகமோ; அப்படியே சித்து அசித்து ஈச்வரனுகிற தத்வத்ரயத்தின் ஸ்வரூப ஸ்வபாவஜ்ஞானமும் மிகவும் ஆவச்யகமாகும். ஏற்கெனவே பிள்ளைலோகாசார்யரருளிச்செய்த தத்வசேகரம் முதலான சில திவ்ய க்ரந்தங்களிருந்தாலும் தத்வத்ரய மென்கிற க்ரந்தமே சிதசிதீச்வர ஸ்வரூப ஸ்வபாவ விசேஷங்களை ஸுஸங்க்ரஹமாகவும் ஸுவ்யக்தமாகவும் வெளியிட்டது. .... .... *

## மூன்று தத்துவங்கள் இன்னின்னவையென்பது

343. சித்தும் அசித்தும் ஈச்வரனுமாகிற மூன்று தத்வங்களே தத்வத்ரயமெனப் படுவன. சைதந்யத்திற்கு [ அறிவுக்கு ] ஆதாரமான வஸ்து சித்து எனப்படும். அறிவையுடைத்தாகாத வஸ்து அசித்தெனப்படும். [ சேதநன் என்பதும் சித்து என்பதும் பர்யாயம்; அசேதநம் என்பதும் அசித்து என்பதும் பர்யாயம். ] சேதநாசேதநப் பொருள்களுக்கு நியாமகனுனவன் ஈச்வரனெனப்படுவன்.

## ஜீவாத்ம ஸ்வரூபத்தை நிரூபித்தல்

344. ஜீவாத்மாவின் ஸ்வரூபமானது தேஹத்திற் காட்டிலும் இந்த்ரியத்திற் காட்டிலும் மநஸ்ஸிற்காட்டிலும் ப்ராணனிற்காட்டிலும் ஜ்ஞாநத்திற்காட்டிலும் வேறுபட்டதாய் அஜடமாய் ஆனந்தரூபமாய் நித்யமாய் அணுவாய் அவ்யக்தமாய் அசிந்த்யமாய் நிர்விகாரமாய் ஜ்ஞாநத்துக் கிருப்பிடமாய் ஈச்வரனுக்கு சரீரமாயிருக்கும்.

345. தேஹமே ஆத்மாவென்றும், இந்த்ரியங்களே ஆத்மாவென்றும் மநஸ்ஸே ஆத்மாவென்றும், ப்ராணனே ஆத்மாவென்றும் ஜ்ஞானமே ஆத்மாவென்றும், இப்படிப் பலர் பலவகையாகச் சொல்லுவதுண்டு; இவை யொன்றும் ஆத்மாவல்ல; இவையெல்லாவற்றிலும் வேறுபட்டு ' அஹம் ' ( நான் ) என்கிற வ்யவஹாரத்திற்கு இலக்கான பொருளே ஜீவாத்மாவெனப்படும், தேஹம் இந்த்ரியம் முதலானவை ஆத்மாவல்ல என்பதை எங்ஙனே தெரிந்துகொள்ளும்படியென்னில்; என்னுடைய தேஹம் என்னுடைய இந்த்ரியம், என்னுடைய மனம் என்னுடைய ப்ராணன், என்னுடைய ஜ்ஞானம் என்றிப்படி 'என்னுடையது' என்கிற புத்திக்கும் அப்படிப்பட்ட வ்யவஹாரத்திற்கும் விஷயமாய்க்கொண்டு தேஹாதிகள் தோற்றுகின்றன; ' என்னுடைய ' என்கிற சொல்லானது நான் என்பதன் ஆறும் வேற்றுமை. நான் என்பதற்கு எது அர்த்தமோ அதுவே தேஹம்

இந்திரியம்....என்பவற்றுக்கும் அர்த்தமாக இருக்கமுடியாது. நான் தேஹம், நான் இந்திரியம்' என்றிப்படி வ்யவஹாரமிருந்தால்தான் அஹமர்த்தமும் தேஹாதிகளும் ஒன்றேயா யிருக்கமுடியும். 'என்னுடைய மகன், என்னுடைய பிதா' என்றால் மகனும் பிதாவும் அஹமர்த்தத்திற் காட்டில் வேறுபட்டவர்களே யன்றி அஹமர்த்தமல்ல வென்று எப்படித் தெரிந்து கொள்ளுகிறோமோ அப்படியே என்னுடைய தேஹம் என்னுடைய இந்திரியம்' இத்யாதி வ்யவஹாரங்களினால் 'தேஹாதிகள் அஹமர்த்தமல்ல— அஹமர்த்தத்திற் காட்டில் வேறுபட்டவை' என்று தெரிந்துகொள்ளக் குறையில்லை.

## கீழே நிரூபித்த ஜீவாத்ம ஸ்வரூபத்தை விவரித்தல்

*346.* இப்படி தேஹாதிவிலக்ஷணமான ஆத்மவஸ்துவானது அஜடமென்றும் ஆனந்த ரூபமென்றும் நித்யமென்றும் அணுவென்றும் அவ்யக்தமென்றும் அசிந்த்யமென்றும் நிர்விகாரமென்றும் ஜ்ஞாநாச்ரயமென்றும் ஈச்வரனுக்கு சரீர பூதமென்றும் கீழேசொன்னோம்; இவற்றையெல்லாம் விசதமாகத் தெரிந்துகொள்வதே ஆத்மஸ்வரூபஜ்ஞானமாகும்.

*347.* ஆத்மா அஜடமாயிருக்கையாவது ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கை. (அதாவது) தன்னுடைய தோற்றத்திற்கு இன்னொரு வஸ்துவை எதிர்பார்க்க வேண்டாதபடி யிருக்கை. ஒரு தீபமானது இன்னொரு தீபத்தை அபேக்ஷியாமலே தன் வ்யவஹாரத்திற்குத் தான் ஹேதுவாகிறுப்போலே ஆத்ம வஸ்துவானது ஜ்ஞானத்தைக்கூட அபேக்ஷியாமல், தானே தோற்றிக்கொண்டிருப்பதுதான் அஜடத்வம்

*348.* ஆத்மவஸ்து ஆனந்தரூபமா யிருக்கையாவது என்னென்னில்; ஆத்மஸ்வரூபம் தனக்குத் தானே ஸுகரூபமாயிருக்கை. இதை நாம் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டியதற்கு சாஸ்த்ர ப்ரமாணமொன்றும் தேடவேண்டா; உறங்கியெழுந்தவன் 'நான் ஸுகமாக வுறங்கினேன்' என்று சொல்லுவது ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். உறக்க நிலைமையில் வெளி விஷயங்களின் அநுபவம் சிறிதுமில்லையென்றும், கேவலம் ஆத்ம ஸ்வரூபம்மட்டுமே ஸ்புரித்துக்கொண்டிருக்கிறதென்றும் தெரிந்துகொண்டிருக்கிறோம். அத்தகைய உறக்கம் விட்டு எழுந்தவன் 'ஸுகமாக வுறங்கினேன்' என்றால் அந்த ஸுகம் ஸ்வரூப ஸுகமேயாகவேணுமேயல்லது வேறொரு ஸுகத்திற்கு ப்ரஸக்தியில்லையே.

*349.* ஆத்மஸ்வரூபம் நித்யமாயிருக்கையாவது—ஒருகால் இருந்து மற்றொருகால் இல்லாமற் போகையன்றிக்கே எப்போது முண்டாயிருக்கை. எப்போதும் உண்டாயிருக்குமாகில், சாஸ்த்ரங்களில் ஆத்மாவுக்குச் சொல்லப்படுகிற ஜன்ம மரணங்கள் கூடும்படி எங்ஙனே யென்னில்; ஜனிக்கிறான், மரிக்கிறானென்றால் ஆத்மாவுண்டாகிறான். ஆத்மா இல்லையாகிறான் என்பதாக அர்த்தமன்று. ஆத்மா தேஹத்தோடு ஸம்பந்திப்பது ஜன்மமெனப்படுகிறது; தேஹத்தைவிட்டுப் பிரிந்து போகை மரணமெனப்படுகிறது. ஆகவே ஆத்மா எப்போதுமுளனென்னத் தட்டில்லை யென்றுணர்க.

350. ஆத்ம ஸ்வரூபம் அணுவாயிருக்கையாவது—ஆத்மாவுக்கு ஹ்ருதயத்திலிருப்பையும், அங்கிருந்து உத்க்ரமணமாவதையும், மேலுலகத்திலிருந்து கீழுலகத்திற்குத் திரும்பி வருகையையும் சுடர்மிகு சுருதி தான் சொல்லுகையாலே அணுவென்னுமிட மறியலாம். விபுவாகில் இவை யொன்றும் கூடாதென்பதைப் பெரியார்களிடம் கேட்டுணர்வது.

## ஆத்மாவின் அணுத்வம் அவ்யக்தத்வம் முதலியவற்றை ஸ்தாபித்தல்

351. ஆத்மவஸ்து அணுபரிமாண முடையதாய் ஹ்ருதயப்ரதேசத்தில் மட்டும் நின்றுவிடுமாகில் 'எனக்குக் காலில் நோவு; எனக்குத் தலையில் நோவு; எனக்குக் காலில் ஸுகம், எனக்குத் தலையில் ஸுகம்' என்றிப்படி காலே பிடித்துத் தலையளவும் சரீரமெங்குமொக்க ஸுக துக்கங்களை புஜிக்கிறபடி கூடுமோவென்னில், ரத்னம் ஸூர்யன் விளக்கு முதலான சுடர்ப் பொருள்கள் ஓரோவிடங்களிலே இருக்கச் செய்தேயும் அவற்றின் ஒளியானது சுற்றெங்கும் வியாபிக்கிறப்போலே, ஆத்மா ஹ்ருதயப்ரதேசத்திலிருக்கச் செய்தேயும் ஆத்மாவின் தர்மமான ஜ்ஞானம் எங்கும் பரம்புகையாலே சரீரமெங்கு மொக்க ஸுக துக்கங்களை புஜிக்கைக்கு ஒரு குறையுமில்லை.

352. ஆத்ம ஸ்வரூபம் அவ்யக்தமா யிருக்கையாவது— உலகில் காணும் பொருள்களை க்ரஹிக்கின்ற கண் முதலியவற்றால் தோற்றாதிருக்கைதான் அவ்யக்தத்வமாவது.

353. [ஆத்ம ஸ்வரூபம் அசிந்த்யம்;]- அசிந்த்யமென்பதற்கு நினைக்கவொண்ணாததென்று பொருள். ஒருபடியாலும் நினைக்கவொண்ணாததென்று பொருள் கொள்ளலாகாது. அங்ஙனம் கொண்டால் ஆத்ம ஸ்வரூப விஷயமான ச்ரவணம் மனனம் எல்லாம் வ்யர்த்தமாக வேண்டிவரும். ஆகையால் அங்ஙனம் பொருள் கொள்ளத்தகாது. அசித்தோடு ஸஜாதீயமாக நினைக்கவொண்ணாதிருக்கையே அசிந்த்யத்வமென்று கொள்ளவேணும். ஆத்மஸ்வரூபம் நிர்விகாரமா யிருக்கையாவது—அசித்துப்போலே விகாரப்படுகையன்றிக்கே ஒருபடிப்பட்டிருக்கை. ஆக இப்படி யிருக்கையாலே சஸ்த்ரத்தால் சேதித்தல், அக்நியால் தஹித்தல்; ஜலத்தால் நனைத்தல், காற்று வெயில் முதலியவற்றால் உலர்த்தல் செய்கைக்கு இலக்காகாமலிருக்குமிவ்வாத்மவஸ்து. சஸ்த்ரமானது ஒன்றைச் சேதிக்க வேணுமானாலும், அக்னியானது ஒன்றை தஹிக்கவேணுமானாலும் அந்தந்த வஸ்துக்களிலே வியாபித்துச் செய்யவேண்டுமன்றோ; ஆத்மா ஸர்வ அசித்தத்வ வ்யாபகனாகை யாலே அவற்றிற்காட்டில் மிகவும் ஸூக்ஷ்ம பூதனாகையாலும், வ்யாப்யமாயும் ஸ்தூலமாயுமிருக்கிற இவை [சஸ்த்ரம் அக்நி முதலானவை] வ்யாபகமாயும் ஸூக்ஷ்மமாயுமிருக்கிற ஆத்மவஸ்துவை வியாபித்து விகாரப்படுத்தமாட்டாமையாலே சஸ்த்ரம் முதலியவற்றினாலாகும் வெட்டுதல் கொளுத்துதல் முதலானவற்றிற்கு (ஆத்மவஸ்து) அநர்ஹமாயிருக்குமென்பதை எளிதினுணரலாம்.

354. 'ஜ்ஞானமே ஆத்மா' என்றும், ஜ்ஞானத்திற்கு ஆச்ரயம் ஆத்மா என்றும் உபநிஷத்து முதலிய பிரமாணங்களினால் அறிகின்றோம். ஞானத்திற்கு ஆச்ரயம் ஆத்மா என்பது பற்றி இப்போது நிரூபணமாகின்றது. ஆத்மா ஞானத்திற்கு

இருப்பிடமாயிருக்கும்; தீபமும் அதன் ஒளியுமாகிய இரண்டும் தேஜோத்ரவ்யமா யிருக்கச்செய்தேயும் தீபமானது ஒளிக்கு ஆச்ரயமாயிருப்பதுபோல, ஆத்மய தானும் ஜ்ஞாந ஸ்வரூபனுயிருக்கச் செய்தே தன்னுடைய தருமமான ஞானத்திற் குத் தன்னையொழியத் தனிப்பட்டிருத்தலாவது, தனிப்பட்டுத் தோன்றுதலாவது இல்லாதபடி தான் ஆதாரமாயிருத்தலே ஜ்ஞாநாச்ரயத்வமாகும்.

355. பௌத்தர் முதலான சில புறமதத்தவர்கள் இப்படி ஆத்மா ஜ்ஞாநாச்ர யபூத னென்பதை இசையாதே ஜ்ஞாந மாத்ரமென்று சொல்லுவதுண்டு; அது பிசகு; ஆத்மாவுக்கு ஜ்ஞாநாச்ரயத்வ மின்றிக்கே கேவலம் ஞானமாயிருக்குமதுவே யுள்ளதாகில் 'நான் இதை யறியா நின்றேன்' என்று உலகத்தில் ஸர்வ ஸம்ப்ரதி பந்நமாகக் காண்கிற வ்யவஹாரம் அஸங்கதமாக வேண்டிவரும்; நான் அறிவு' என்று தன்னை ஜ்ஞான மாத்ரமாகவன்றோ சொல்லிக்கொள்ள வேண்டும். இப் படிப்பட்ட வியவஹாரம் ஒரு வ்யக்தியினிடத்தும் காண்பதில்லை. 'இவ்வர்த் தத்தை நானறியா நின்றேன்' 'இவ்விஷயத்தை நானறிந்துகொண்டேன்' என்றிப் படியே வ்யவஹாரங்கள் எங்கும் காண்கையாலே. இவ்விஷயத்தை க்ரஹிப்பதான தொரு ஜ்ஞானத்திற்குத் தான் ஆச்ரயமென்னுமிடம் நன்கு தெரிகின்றதின்றோ.

356. ஆத்மாவை ஜ்ஞாதாவென்று தெரிந்துகொண்ட போதே கர்த்தாவென் றும் போக்தாவென்றும் தெரிந்துகொள்ளவேணும். இன்னது ஹேயம், இன்னது உபாதேயம் என்கிற ப்ரதிபத்திக்கு ஜ்ஞாத்ருத்வமானது ஹேதுவாயிருக்குமாகை யாலே ஹேயங்களை விடுகையிலும் உபாதேயங்களைப் பற்றுகையிலும் சிகீர்ஷையுண் டாகி [முயற்சியுண்டாகி என்றபடி] அம்முயற்சி அடியாகக் கர்த்ருத்வமுண்டா கிறது. எவன் ஒரு காரியத்தைச் செய்கிறானோ அவன் அதனாலுண்டாகும் பலனை யனுபவிப்பவனுமாகிறான். ஆகவே கர்த்தாவானபோதே போக்தாவாகிறான். ஆன பின்பு ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம் சொன்னது கர்த்ருத்வ போக்த்ருத்வங்களும் சொன்னபடியாகக் குறையில்லை.

357. இப்படி ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமா யிருந்துள்ள கர்த்ருத்வத்தை ஸாங்க்யர்கள் ப்ரக்ருதிக்கேயுள்ளதாகக் கொள்ளுகின்றார்கள்; அது பிசகு. ப்ரக்ரு திக்கே கர்த்ருத்வமாய் ஆத்மாவுக்கு அஃதில்லையாகில் ஆத்மாவுக்கு சாஸ்த்ரவச்ய யத்வமும் போக்த்ருத்வமும் குலைந்ததாகும்; சாஸ்த்ர வச்யத்வமாவது—விதி நிஷே தரூபமான சாஸ்த்ரத்துக்குத் தான் அதிகாரியாய்க்கொண்டு அதின் வசத்திலே நடக்கவேண்டுகையாம். சாஸ்த்ரங்களானவை ஒருபுறத்திலே 'இதைச் செய், அதைச் செய்' என்று கர்த்தவ்யங்களை விதிக்கும்; மற்றொருபுறத்திலே 'இதைச் செய்யாதே, அதைச் செய்யாதே' என்று நிஷித்தங்களை விலக்கும். இத்தகைய விதி நிஷேதங்கள் சேதநனைப்பற்றி அவதரித்தனவே யல்லது ப்ரக்ருதியைப்பற்றி அவதரித்தனவல்ல. ப்ரக்ருதிக்கேதான் கர்த்ருத்வமென்னில் சாஸ்த்ரங்களில் காணும் விதி நிஷேதங்கள் ப்ரக்ருதியை நோக்கியவை யென்ன வேணும். ஆகவே சாஸ்த்ரவச்யத்வம் சேதநனுக்குக் குலைந்ததாகும்.

358. அன்றியும், விஹிதங்களான ஸத்கருமங்களைச் செய்து. நிஷித்தங்களான துஷ்கருமங்களை விலக்கி வர்த்திக்கின்ற சேதநன் நல்ல பலன்களை யநுபவிக்கையும்,

விஹிதங்களை விட்டு நிஷித்தங்களைச் செய்து திரியும் சேதநன் தீய பலன்களை யநுபவிக்கையும் ஸர்வ ஸம்ப்ரதிபந்நமா யிருக்கின்றது; இப்படிப்பட்ட ஸுகதுக்க ரூப பல போக்த்ருத்வமும் சேராமற் போகும். பல சொல்லி என்? சேதநன் கர்த்தாவாகாதபோது சாஸ்த்ரமே வீண் என்ன வேண்டிவரும்.

359. ஆனுல் இந்த சேதநனுக்கு எல்லாவிதமான கர்த்ருத்வமும் ஸ்வரூப ப்ர யுக்தமாமோ வென்னில்; அன்னபாநாதிகளான லௌகிக போகங்களை யுத்தேசித் துப் பண்ணும் ஸ்வவ்யாபாரங்களில் கர்த்ருத்வம் ஔபாதிகமாகையாலே ஸ்வ ரூப ப்ரயுக்தமன்று. ஆனல் அது இவனுக்கு வந்தபடி தான் என்னென்னில் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களாகிற குணங்களினுடைய ஸம்ஸர்க்கத்தாலே யுண்டான தென்று சாஸ்த்ரம் சொல்லும்.

## ஆத்மாவுக்குச் சொன்ன கர்த்ருத்வம் ஈச்வராதீனமென்று மூதலித்தல்

360. இனி இந்த கர்த்ருத்வமானது ஸ்வாதீநமா? பராதீனமா? என்கிற சங்கை யிலே சொல்லவேண்டியவை சொல்லப்படுகின்றன. ஆத்மாவின் கர்த்ருத்வம் ஈச் வராதீநமென்று நிரூபிக்கப்படுகிறது. சாஸ்த்ரம் அர்த்தவத்தாக வேண்டியதற்காக கர்த்ருத்வம் ஆத்ம தர்மமென்று கொள்ளவேணும். அந்த கர்த்தாவுக்கு தர்ம மான ஜ்ஞானம் இச்சை ப்ரயத்நம் ஆகிறவிவை பகவானுக்கு அதீனங்களா யிருக் கையாலும், பகவானுடைய அநுமதியில்லாமல் அந்த ஞானம் முதலியவை க்ரியா ஹேதுவாக மாட்டாமையாலும் இவனுடைய கர்த்ருத்வம் ஈச்வராதீநமென்று கொள்ளவேணும்.

361. இங்ஙனே கொண்டால் புண்யபாபங்கள் ஈச்வரனுக்கேயாக வேண் டாவோ? சேதநனுக்கு ஆக இடமில்லையே! என்கிற சங்கை உதிக்கக்கூடும்; "சேதநனுடைய புத்திமூலமான ப்ரயத்நத்தை யபேக்ஷித்து ஈச்வரன் அநுமதி பண்ணுகையாலே அந்த க்ரியையைப்பற்றி வரும் புண்ய பாபங்களும் சேத நனுக்கேயாகின்றன" என்று நம் பூருவாசாரியர்கள் அருளிச் செய்கின்றனர். ப்ரஹ்ம ஸூத்ரத்தில் * பராத் து தத் ச்ருதே: * என்கிற ஸூத்ரத்தினுல் ஆத்மாவி னுடைய கர்த்ருத்வம் பராயத்தமென்று சொல்லப்பட்டிருப்பதும், *க்ருதப்ரயத்நா பேக்ஷஸ் து விஹிதப்ரதிஷித்த அவையர்த்த்யாதிப்ய: * என்கிற ஸூத்ரத்தினுல் சங்கா பரி ஹாரம் செய்யப்பட்டிருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது. விதி நிஷேத சாஸ்த்ரங் கள் வீணுகாமைக்காக இச்சேதநன் பண்ணின ப்ரதம ப்ரயத்நத்தை யபேக்ஷித்துக் கொண்டு ஈச்வரன் ப்ரவர்த்திப்பிக்கிருனென்றதாயிற்று.

## ஆத்மாவின் அந்தரங்க நிருபக நிருபணம்

362. ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வத்திற் காட்டிலும் சேஷத்வமே முக்கியமென் பது குறிக்கொள்ளத்தக்கது. இவ்விஷயத்தைக் கூரத்தாழ்வான் திருக்கோட்டியூர் நம்பிபக்கலிலே ஆறுமாஸம் ஸேவித்திருந்து நிதியாகப் பெற்று எம்பெருமானுர்க்கு விண்ணப்பம் செய்தார். இப்பரமார்த்தத்தை எம்பெருமானுர் கீதாபாஷ்யத்திலே (ஏழாமத்யாயத்திலே) ஜ்ஞாநீ என்னுமதிகாரியை விவரித்தருளுமிடத்தில் "பகவச் சேஷதைகரஸ ஆத்மஸ்வருபவித்" என்கிற ஸ்ரீ ஸூக்தியாலே யருளிச்செய்தார். ஈச்வர

ஸ்வரூபத்தை யறிந்தவன் ஜ்ஞானியென்று சங்கரபாஷ்யத்திலுள்ளது. அதைத் தள்ளி எம்பெருமானார் "பகவச் சேஷதைகரஸே" த்யாதியை யருளிச்செய்தது திருவாய்மொழியில் (8-8-2) *அடியேனுள்ளா னென்ற சந்தையிலுள்ள நிதியான விசேஷத்தைத் திருவுள்ளம்பற்றியே யென்பதை குருமுகமாக விரியக்கேட்டுணர்வது. ஆத்ம ஸ்வரூபம் பத்தர் முக்தர் நித்யர் என்று மூன்று படிப்பட்டிருக்கு மென்பதும் மூவகைப்பட்ட ஆத்மவர்க்கமும் தனித்தனியே அனந்தமா யிருக்குமென்பதும் அறியத்தக்கவை. .... .... .... .... 9

## நவரத்ன நவநிதியில் ஆருவது நிதி முற்றிற்று.
## ஏழாவது நிதி அசித்தத்வ நிரூபண ஸாரம்.

### அசித்தத்வத்தின் பாகுபாடு

*363.* இனி அசேதந தத்வத்தைப்பற்றி அதி ஸம்க்ஷேபமாகச் சொல்லலாகிறது. அசேதநமென்றாலும் அசித்து என்றாலும் பரியாயமே யென்று ஏற்கெனவே தெரிவிக்கப்பட்டது. அறிவற்றதாய் விகாரப்பட்டுக்கொண்டே யிருப்பது அசித்தெனப்படும் இது சுத்தஸத்வமென்றும் மிச்ர ஸத்வமென்றும் ஸத்வசூனிய மென்றும் மூன்றுவகைப்படும். சுத்தஸத்வமென்பது பரமபதம். அது அசேதனகோடியிற் சேர்ந்தாலும் ஜடமாக இருக்கவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. அஜடமென்று கொள்ளலாம். ஜடமென்று கொள்ளுகிற பக்ஷமுமொன்றுண்டு; தத்வ முக்தாகலாபத்தில் *இஹ ஜடாம் ஆநிமாம் ந ேசிதாஹு:* என்றார் வேதாந்த வாசிரியர். மிச்ரஸத்வமாவது ப்ரக்ருதி. இது ரஜோகுணத்தோடும் தமோகுணத்தோடுங் கூடின ஸத்வகுணத்தையுடைத்தாகையாலே இது மிச்ரஸத்வ மென்னப்படுகிறது. ஸம்ஸாரியான சேதனர்களின் ஞானத்தையும் ஆனந்தத்தையும் மறைக்குமிது. விபரீத ஞானத்தையுமுண்டாக்கும். எம்பெருமானுடைய லீலைக்கு இது பரிகரமாயிருக்கும். இதை யிட்டே லீலா விபூதியென்பது. ப்ரக்ருதி யென்கிற பெயரோடுகூட அவித்யை மாயை என்கிற பெயர்களுமுண்டு இதற்கு. ஆச்சரியமான ஸ்ருஷ்டியைப் பண்ணுவதால் மாயை யென்கிறது.

### ஸத்வசூன்யமென்கிற காலத்தைப்பற்றின நிரூபணம்

*364.* ஸத்வ சூந்யமென்று மூன்றாவதாகச் சொல்லப்பட்ட அசித்தத்வமாவது காலம். ப்ரக்ருதியினுடையவும் ப்ராக்ருதங்களினுடையவும் பரிணாமத்திற்கு இது ஹேதுவாயிருக்கும். அதாவது, எம்பெருமான் தன்னுடைய ஸங்கல்பத்தாலே இவற்றைப் பரிணமிக்கச் செய்கிறபோது காலத்தினுடைய அவஸ்தா விசேஷங்களைப் பார்த்துக்கொண்டிருந்து அவ்வக்காலங்கள் வந்தவாறே பரிணாம நிர்வாஹம் செய்து போருகையாலே இதற்குக் காலம் அவச்யா பேக்ஷிதமா யிருக்குமென்று கொள்க. சிலர் காலமென்பதே கிடையாதென்றார்கள். ஸ்தாவர ஜங்கம ரூபங்களான ஸகல பதார்த்தங்களும் காலத்தினாலாய பரிணாமமுள்ளனவாகவே கட்கூடாகக் காணப்படுதலாலும், கலாகாஷ்டா முஹூர்த்தாதிகளைப்பற்றியும், வஸந்தம் முதலான ருதுக்களைப்பற்றியும், மதுமாதவாதி மாஸங்களைப்பற்றியும், மற்றும் இவற்றைச் சேர்ந்த பலவற்றைப்பற்றியும் வேதங்களிற் சொல்லுகையாலும் காலத்தை இல்லை செய்வது கூடாது. திக்குஎன்று தனியேஒருத்ரவ்ய முண்டென்று புலர் சொல்லுவது அயுக்தம்,

## இருபத்துநான்கு தத்வ நிருபணம்

365. முக்யமாக, அவித்யை யென்றும், மாயையென்றும் சொல்லப்படுகிற ப்ரக்ருதியானது இருபத்துநான்கு தத்துவமாயிருக்கும். (அவற்றின் விவரணம்) சப்தாதி விஷயங்கள் ஐந்து; ஆகாசாதி பூதங்கள் ஐந்து; பஞ்ச ஜ்ஞானேந்திரியங்கள், பஞ்ச கருமேந்திரியங்கள்; இவற்றுக்கு ஸஹகாரியான மனஸ்ஸு. மஹான் அஹங்காரம் ப்ரக்ருதி என்பனவாம். திருவாய்மொழியில் *பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம், இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானங்கார மனங்களே*என்கிற பாசுரத்தை யநுஸந்திப்பது. இவை, போக்யம் போகோபகரணம் போகஸ்தானம் என்று மூவகையா யிருக்கும். விஷயங்கள் போக்யங்களாம். செவி வாய் கண் மூக்கு முதலானவை போகோபகரணங்களாம். பதினன்கு லோகங்களும் ஸகலதேஹங்களும் போகஸ்தானங்களாம்.
அசித்ஸ்வரூப நிரூபணமாயிற்று. .... .... .... .... *

### நவரத்ன நவநிதியில் ஏழாவது நிதி முற்றிற்று.
### எட்டாவது நிதி—ஈச்வரதத்வ நிரூபண ஸாரம்.

366. கீழே நிரூபித்த சேதநா சேதநங்களுக்கு நியாமகனானவன் ஈச்வரனென்றும் ஸர்வேச்வரனென்றும் சொல்லப்படுவன், விஷ்ணு நாராயண வாஸுதேவாதிகளான திருநாமங்களினால் சொல்லப்படுவன். * தேவோ நாமஸஹஸ்ரவாந்! என்றும், * ஓராயிரமா யுலகேழளிக்கும் பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்* என்றும் சொல்லுகிறபடியே ஆயிரந்திருநாமங்கள் படைத்தவனானவன் அந்தத் திருநாமங்களுக்கு ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்த "பகவத்குண தர்ப்பணம்" என்னும் மறுபெயருடைத்தான பாஷ்யத்தை ஸேவித்தால் எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபவைச்வரியங்களெல்லாம் விசதமாக விளங்கும்.

### எம்பெருமானுடைய உபயலிங்க நிருபணாதிகள்

367. நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போதே *உயர்வற வுயர்நலமுடையவன்* என்று தொடங்கினராதலால் எம்பெருமானை ஸமஸ்தகல்யாண குணகண நிதியாக அறிவதே முக்கியமானது. * அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாநனென்று அறியவேணும். அகிலஹேய ப்ரத்யநீகத்வமும் கல்யாணைகதாநத்வமுமாகிற இவை யிரண்டும் உபயலிங்க மெனப்படும். ஒருவிதமான தோஷமும் தட்டாமலிருக்கைதான் அகில ஹேயப்ரத்யநீகத்வமாகும். கல்யாணகுணமென்று பேர்பெற்றவை யெல்லாவற்றிற்கும் கொள்கலமாயிருக்கை—கல்யாணைகதாநத்வம்.

368. துக்கப்படுகை ஹேயகுணமானாலும் பரதுஃக்க துஃக்கித்வமென்பது ஹேய குணமன்றாதலாலும், ஸ்ரீ ராமாயணத்தில் * பஹவோ ந்ருப! கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே * என்ற மகுடத்தின்கீழ் * வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:* என்று கூறின முகத்தால் கல்யாண குணமாகவே ஸ்பஷ்டமாகக் கூறியிருப்பதாலும் "பரதுக்க துக்கித்வத்தை ஸர்வேச்வரனுக்குக் கொண்டால் ஹேயப்ரத்யநீகத்வத்திற்கு மாறாகும்" என்கிற வாதத்திற்கு இடமில்லை.

369. எம்பெருமானுக்கு அநந்தனென்கிற திருநாமமு முண்டு அந்தமாவது பரிச்சேதம். தேசகாலபரிச்சேதம், வஸ்துபரிச்சேதம் என்கிற மூவகைப் பரிச்சேதமுமில்லாதவன் எம்பெருமான் என்றபடி. 'இன்ன தேசத்திலுள்ளான், இன்ன தேசத்தில்லை' என்று சொல்ல முடியாதபடி எல்லா தேசங்களிலு முளனாகையாலே தேச பரிச்சேதமில்லாதவன். 'இன்னகாலத்திலுள்ளான், இன்னகாலத்திலில்லை' என்று சொல்லமுடியாதபடி எல்லாக் காலத்திலு மிருக்கையாலே காலபரிச்சேத மில்லாதவன்; 'இன்ன வஸ்துவாக இருக்கிறான், இன்ன வஸ்துவாக இல்லை' என்று சொல்லமுடியாதபடி ஸகல வஸ்து ஸ்வரூபனாகவு மிருக்கையாலே வஸ்து பரிச்சேத மில்லாதவன்.

## அந்தர்யாமித்வத்தில் தோஷஸம்பந்தமில்லாமை

370. எம்பெருமான் ஸகல வஸ்துக்களிலும் அந்தர்யாமியா யிருப்பனென்றால் அந்தந்த வஸ்துக்களிலுள்ள தோஷங்கள் இவன்பால் ஒட்டாதோ? என்று சங்கை வரும். அந்த சங்கைவேண்டா. ஜீவாத்மாவானவன் சரீரத்திலும் இருக்கச்செய்தேயும் சரீரத்திற் குண்டான இளமை முதுமை முதலியன எப்படி அந்த ஆத்மாவுக்கு வருவதில்லையோ அப்படியே ஸர்வவஸ்து சரீரகனான பகவானுக்கும் ஒரு வஸ்துவினுடையவும்ஒருவிதமான தோஷமும் தட்டாது.

371. இதற்கொரு நிதர்சனம் காணலாம். குற்றம் செய்ததற்காக ராஜதண்டனை யடைந்த குற்றவாளி சிறைச்சாலையில் புகுவிக்கப்பட்டுத் துக்கங்களை யனுபவிக்கிறான். அதே சிறைச்சாலையில் அதற்கு நியாமகனான அதிகாரியும் உறைகின்றான். சிறையில் இருப்பு என்பது இவ்விருவர்க்கும் உள்ளதா யிருக்கச் செய்தேயும் அதிகாரியான பிரபுவுக்கு எவ்வித மான துக்கமும் கிடையாது. ஏன்? இவன் சிறைச்சாலையிலிருப்பது குற்றஞ் செய்தது காரணமாகவன்று; நியமிப்பதற் காக விருக்கிறான்; ஆகவே இவனுக்கு துக்கமில்லாததோடு கூட மாதந்தோறும் ஆயிரம் இரண்டாயிரம் சம்பளம் பெறுகையாகிற ஆனந்தமுமுள்ளது. இதேபோல, கருமம் காரணமாக ஜீவன் சரீரவாஸம் பெறுகையாலே துக்கமுடையவனாக ஆகிறான். பரமபுருஷன் அங்ஙனன்றிக்கே *அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* என்று வேதாந்தமோதினபடியே சாஸ்தாவாக அந்த: ப்ரவிஷ்டனா யிருப்பதனால் இவனுக்கு எவ்வித மான தோஷமும் ஒட்டாது.

## எம்பெருமானுடைய நீர்மைக் குணங்களின் சிந்தனை

372. ஈச்வரன் ஒப்புயர்வற்ற எண்ணிறந்த திருக்குணங்களோடு கூடியிருக்கிறானெனினும் முக்கியமாக தயை பொறுமை வாத்ஸல்யம் முதலான சில திருக்குணங்களையே நாம் நிச்சலும் சிந்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். பிறர் நோவு கண்டால் ஐயோவென்று இரங்கி யிருப்பன். அவர்களுக்கு எப்போதும் நன்மையையே சிந்தித்திருப்பன். நிலாத்தென்றல் சந்தனம் தண்ணீர்போலே பிறர்க்கே உரிமைப்பட்டிருப்பன். தன்னை யடிபணிந்தவர்களிடத்தில் ஜாதி அறிவு ஒழுக்கம் முதலானவற்றா லுண்டான தண்மையைச் சிறிதும் பாராமல் தன்னைப் பணிந்தவர்களென்பதொன்றே கொண்டு நேசித்திருப்பன். உற்றாருறவினர் கைவிட்ட காலத்திலும் தான் கைவிடாதே யிருந்து செயற்கரியன செய்தும் அவர்களின்

அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டிக்கொடுப்பன். அவர்களது காரியம் தலைக்கட்டினால் தன் காரியம் தலைக்கட்டிற்று : வென்னணி க்ருதக்ருத்யனா யிருப்பன். அவர்களுக்குத் தான் செய்த நன்மைகளில் ஒன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸ்வல்ப ஸுக்ருதங்களையே மலையாகக்கொண்டு அவர்களை யநுக்ரஹிப்பதிலேயே நோக்கா யிருப்பன். மனைவியர் மக்கள் செய்யும் குற்றங்களைக் காணக் கண்ணிட்டிருக்கும் புருஷனைப்போல அவர்கள் குற்றங்களை நினையாதே குற்றங்களைப் பெரிய பிராட்டி யார் காட்டினாலும் 'என்னடியார் அது செய்யார்' என்று சொல்லியும், *செய்தா ரேல் நன்று செய்தார்* என்று சொல்லியும் வாத்ஸல்யம் காட்டியிருப்பன். மன மொழி மெய்களால் அவர்கள் குடிலர்களா யிருந்தாலும் தான் செவ்வியனா யிருந்து பரிமாறுவன்: இப்படிப்பட்ட அரிய பெரிய திருக்குணங்களை அநுபவ ரஸிகர்களான பெரியார் தங்களுடைய அநுபவத்திற்குப் போக்கு வீடாக எடுத்துரைத்தால் அதில் வெறுப்பும் அதிர்ச்சியு மின்றிக்கே யிருப்பதுதான் நம்போலியர்க்கு குணா நுபவம்.

## எம்பெருமானுடைய ஸகல காரணத்வ நிரூபணம்

373. எம்பெருமானுடைய நீர்மைக்குணங்களைக் கீழே பரக்கப் பேசினபடி. மேன் மைக் குணத்தைப் பேசப்புக்கால் 'ஸகலஜகத்துக்களுக்கும் அவனே காரண பூதன் என்றறிவ தொன்றே போதுமானது. நான்கு அத்யாயங்கள் கொண்ட சாரீரக மீமாம்ஸை யென்னும் ப்ரஹ்மஸூத்ரத்தில் இரண்டத்யாயங்களால் அவனுடைய ஸகல ஜகத் காரணத்வமே பலவகைப் பூர்வபக்ஷங்களையும் நிரஸித்து ஸ்தாபிக்கப்படுகிறது. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் எம்பெருமானுடைய ஸங்கல்ப மாத்தி ரத்தினால் நிகழ்பவை. காரணத்வமானது உபாதாநத்வம் நிமித்தத்வம் ஸஹகாரித் வம் என்று மூவகையாயிருக்கும். ஒரு பானையுண்டாக வேணுமானால் மண் உபா தான காரணமாயிருக்கும். குயவன் நிமித்த காரணமாயிருப்பன். தடி சக்கரம் தண்ணீர் முதலானவை ஸஹகாரிகாரணமா யிருக்கும். உலகில் எந்த வஸ்து ஜனிக்க வேணுமானாலும் இங்ஙனே மூன்று காரணங்கள் இன்றியமையாதனவாம். ஸகல ஜகத்துக்களுக்கும் உத்பாதகனான ஸர்வேச்வரன் தானொருவனே மூவகைக் காரண மாயுமிருப்பன் என்பதை நெஞ்சில் திடமாகக்கொள்ளவேணும்.

## பரவ்யூஹ விபவாந்தர்யாம்யர்ச்சா நிரூபணம்

374. ஈச்வர ஸ்வரூபமானது—பரத்வம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சாவதாரம் என்று ஐந்து ப்ரகாரத்தோடே கூடியிருக்கும். இவ்வைந்தையும் சுருக்கமாக உபபாதிக்கக்கேளீர். [பரத்வம்] *நலமந்த மில்லதோர் நாடு* என்கிற பரமபதத்திலே நித்யஸூரிகளான அனந்தகருட விஷ்வக்ஸேநாதிகளுக்கும், ஸம்ஸார ஸம்பந்தமற்றுச் சென்று சேர்ந்த முக்தாத்மாக்களுக்கும் போக்யனாய்க் கொண்டு எழுந்தருளி யிருக்குமிருப்பு பரத்வமெனப்படும்.

375. [வ்யூஹம்.] இதற்கு உபயோகம் லீலாவிபூதியி லாகையாலே இவ் விபூதியி னுடைய ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நிர்வஹிக்கைக்காகவும் புபுக்ஷுக்களான ஸம்ஸாரிகளை இஷ்டப்ராபண அநிஷ்ட நிவாரணங்களாலே ஸம்ரக்ஷிக்கைக்காக வும் உபாஸகர்களை யநுக்ரஹிக்கைக்காகவும் ஸங்கர்ஷணப்ரத்யும்ந அநிருத்த ரூபேண நிற்கும் நிலை வியூஹமெனப்படும்.

376. [3- விபவம்.] * அஜாயமாநோ பஹுதா விஜாயதே * . என்றும் * பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ* என்றும் உபநிஷத்து ஓதுகிறபடியும், * எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் * * மீனாயாமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய், கானாரேனமுமாய்க் கற்கியாமின்னங் கார்வண்ணனே* என்று ஆழ்வாரருளிச் செய்கிறபடியும் மநுஷ்யதிர்யக் ஸ்தாவராதி ஜன்மங்கள் கொள்ளுகை விபவமெனப்படும்.

377. [4. அந்தர்யாமித்வம். | *ய ஆத்மாநம் அந்தரோ யமயதி* சாஸ்தா விஷ்ணுரசேஷஸய ஜகதோ யோஹ்ருதி ஸ்தித: * இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்* இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே சேதநருடையவுள்ளே ப்ரவேசித்து ஸகல ப்ரவ்ருத்திகளுக்கும் நியாமகனா யிருக்குமிருப்பு அந்தர்யாமித்வமெனப்படும்.

378. [5.அர்ச்சாவதாரம்.] *தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே* என்கிறபடியே நமக்கு அபிமதமான த்ரவ்யத்தைத் திருமேனியாகக் கொண்டு நம் போல்வாருடைய ஆராதனைக்கு எளியனாய் ஸர்வஸஹிஷ்ணுவாய் ஸ்நாந போஜநாதி ஸகல வ்யாபாரங்களும் அர்ச்சக பராதீனமா யிருக்கப்பெற்ற நிலைமை அர்ச்சாவதார மெனப்படும்.

379. பிள்ளை லோகாசார்ய ரருளிச்செய்த தத்வத்யத்தில் முடிவான சூர்ணை "* ஸ்வஸ்வாமிபாவத்தை மாறாடிக்கொண்டு அஜ்ஞரைப் போலேயும் அசக்தரைப்போலேயும் அஸ்வதந்த்ரரைப் போலேயு மிருக்கச்செய்தேயும் அபார காருண்ய பரவசனாய்க்கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளும்" என்பது. இஃதொன்றை நிச்சலும் சிந்தனை செய்து கொண்டு வாழ்வாரே வாழ்வார்.

நவரத்ன நவநிதியில் எட்டாவது நிதியான ஈச்வரஸ்வரூபநிரூபணம் ஸாரம் முற்றிற்று.

## ஒன்பதாவதுநிதி - விசிஷ்டாத்வைத ஸாரம்

380 உலகில் பலபல மதங்கள் தோன்றியிருந்தாலும் அவை வைதிக மதமென்றும் அவைதிக மதமென்றும் பொதுவாக இருவகுப்பாகும். வேதத்தைப் பிரமாணமாகக்கொள்ளும் மதம் வைதிகமதம். வேதத்தைப் புறக்கணித்து ஸ்வதந்திரமாகத் தோன்றிய மதம் அவைதிக மதம். அவைதிக மதங்களிற் காட்டிலும் வைதிக மதம் சிறந்ததென்னு மிடத்தை நாம் விவரிக்க வேணுமோ? வைதிக மதங்களுள் பரமபவித்திரமான விசிஷ்டாத்வைத தரிசனம் மிகச் சிறந்து விளங்குகின்றது. நம்மாழ்வார் திருவாய் மொழி தொடங்கும்போது "உளன் சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே" என்கிற பாசுரத்தினால் 'தாம் போதிக்கும் பரம புருஷன் வேதங்களிலும் வேதாந்தங்களிலும் விளங்குபவன்' என்றருளிச் செய்கையாலே இக்கலியுகத்தில் அவ்வாழ்வார் தொடக்கமாகப் பரவியுள்ள விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயம் பரம வைதிகமென்னத் தட்டில்லை. ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தரிசனத்தில் சீர்மைபெற்று விளங்குவன.

381 "ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி, தாழ்வாதுமில் குரவர்தாம் வாழி — ஏழ்பாரு முய்ய அவர்களுரைத்தவைகள் தாம்வாழி, செய்யமறை தன்னுடனே சேர்ந்து" என்னுமுபதேசரத்தினமாலைப் பாசுரத்தில் ப்ரமாணங்களும் ப்ரமாதாக்களும் ஸாரமாகத் தெரிவிக்கப்பட்டார்கள். ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதங்களாகிற உபய வேதங்களும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகளும் நமக்கு ப்ரமாணம்.

யதார்த்தஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்கள். ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவ மென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளேதஞ்சமென்றிருக்கை பரமஹித மென்றும், *நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய கைங்கர்யமே பரம புருஷார்த்த மென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்தவிசேஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன.

382 பரமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிந்துகொள்ள முடியாத அர்த்த விசேஷங்களையறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும். வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாகஜைந பௌத்தாதிகள் பாஹ்யர்களெனப்படுவர். வேதத்தைப் பரமப்ரமாணமாக இசைந்து வைத்தும் பரப்ரஹ்மம் குணசூந்யமென்றும் அலக்ஷ்மீக மென்றும் அசரீர மென்றும் விபூதிவிரஹிதமென்றும் இங்ஙனே மனம்போனபடி யெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர். குத்ருஷ்டிகளானாலும் வேதத்தை ப்ரமாணமாக இசையு மவர்கள் வேதபாஹ்யர்களிற் காட்டிலும் மேம்பட்டவர்களன்றோ வென்று சிலர் நினைக்கக்கூடும். பாஹ்யர்களோடு அவர்களோடு ஒரு வாசியில்லை. யென்றருளிச் செய்கிறார் கூரத்தாழ்வான்.

383. வேதம் கர்மகாண்ட மென்றும் ப்ரஹ்மகாண்ட மென்றும் இரு வகுப் பாகவுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்ட மென்றும், உத்தரபாகம் ப்ரஹ்மகாண்ட மென்றும் வழங்கப்படும். உபநிஷத்துக்களையே ப்ரஹ்மகாண்ட மென்பது. பக வானுக்கு ஆராதன ரூபங்களான யஜ்ஞம் முதலிய கரும விசேஷங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் கர்ம காண்ட மென்றும், அக்கருமங்களினால் ஆராதிக்கப்படு கின்ற பகவானுடைய ஸ்வரூப ரூபகுணங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ் மகாண்ட மென்றும் சொல்லிற்றாயிற்று இதுவே உபநிஷத்தென்கிறபெயராலும் வழங்கும். "வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:* என்கிற கீதையின்படி கர்ம காண்ட முங்கூட பகவானை ப்ரதிபாதிக்கவல்லதேயாயினும் அந்த ப்ரதிபாதனம் வ்யவஹிதமாயிருக்கும். உபநிஷித்து அவ்யவதாநேந ப்ரதிபாதகமாயிருக்கும்.

384. கர்மகாண்டத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக ஜைமிநி யென்னும் மஹர்ஷியெழுந்து பதினாறு அத்யாயங்களோடு கூடிய ஒரு சாஸ்த்ரத்தை யியற்றினார். அதற்குப் பூர்வமீமாம்ஸையென்று பெயர். இதில் பன்னிரண்டு அத் யாயங்களே ஜைமினி மஹர்ஷியால் இயற்றப்பட்டவை யென்றும், மேல் நான்கு அத்யாயங்கள் காசக்ருத்ஸ்ந மஹர்ஷியால் இயற்றப்பட்டவை யென்றும் ஒரு பக்ஷமுண்டு இதைப்பற்றி இங்கு விசாரவிரிவு வேண்டா. ப்ரஹ்மகாண்ட மென்னும் உபநிஷத் பாகத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸ மஹர்ஷி யெழுந்து நான்கு அத்யாயங்கள் கொண்டவொரு சாஸ்த்ரத்தை இயற்றினார். அதற்கே சாரீரகமீமாம்ஸை யென்று பெயர். உத்தரமீமாம்ஸை யென் றும் வழங்குவர். ப்ரஹ்மஸூத்ரமென்பது இதனையே. ஒவ்வோரத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினாறு பாதங்கள் கொண்டது சாரீரகமீ மாம்ஸை யென்றதாயிற்று. இதில் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றி சர்ச்சை செய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட

அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் (156) நூற்றைம்பத்தாறு உள்ளன. சில அதிகரணங்களில் ஒரே ஸூத்ரமிருக்கும். பல அதிகரணங்களில் பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் (545) ஐந்நூற்றுநாற்பத்தைந்து என்று கணக்கிடப்பட்டிருக்கின்றது. ஆக, நான்கு அத்யாயங்களேயும், பதினாறு பாதங்களேயும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களேயும் ஐந்நூற்று நாற்பத்தைந்து ஸூத்ரங்களேயும் கொண்டது ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமென்றதாயிற்று.

385. தத்வஹித புருஷார்த்தங்களே நாம் தெரிந்து கொள்வதற்கு உபநிஷத்துக்களே தஞ்சமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களே ஸம்சய விபர்யயமற நிஷ்கர்ஷித்து விளக்கக்கூடியது இந்த ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமேயாதலால் வேதாந்திகளுக்கு இதுவே புகலாயிற்று. இந்த சாஸ்த்ரத்தின் பொருளே நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்துகொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்மஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார். மஹர்ஷிகளியற்றிய ஸூத்ரங்களின் பொருளே நம் போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால், நம் போன்ற அல்பமதிகளிடத்தில் பரமகருணை கொண்ட பூருவர்கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்க பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். த்வைதம் அத்வைதம் சிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலக ப்ரஸித்தமாக வழங்குமவை இம் மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன. அத்வைத மதத்திற்காக சங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷ்யமியற்றினர். த்வைத மதத்திற்காக ஆனந்த தீர்த்த ஸ்வாமிகள் (மத்வாசார்) பாஷ்யமியற்றினர். நமது விசிஷ்டாத்வைத மதத்திற்காக பகவத் ராமாநுஜாசார்யரென்கிற ஸ்வாமி யெம்பெருமானர் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்தார்.

386. உபநிஷத்துக்களின் உண்மைப் பொருளே ஸூத்ரகாரருடைய உள்ளத்திற்கு ஒத்ததாக நிஷ்பக்ஷபாதமாய் நிருமிக்கப்பட்டது. ஸ்ரீ பாஷ்யமேயென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அது நிற்க ஸ்வாமி ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்யத் தொடங்கும் போதே "பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்று [முன்னேர் மொழிந்த முறைதப்பாமே வியாக்கியானிப்பதாக] அருளிச்செய் திருப்பதனால் ஸ்ரீ பாஷ்யத்தின் ப்ராமாணிகத்வம் விளங்குகின்றது. ஆர்ஷவயாக்க்யாநகவசிதமாயும் அதிப்ராசீநமாயும் பரம பவித்திரமாயுமுள்ளது விசிஷ்டாத்வைதமேயென்றும், அதை நிலைநாட்டவல்ல பாஷ்யம் ஸ்ரீபாஷ்யமேயென்றும் ப்ராமாணிக வைதிகோத்தமர்களின் கொள்கை.

387. விசிஷ்டாத்வைத ஸித்தாந்த மென்னுஞ் சொல்லுக்குப் பொருள் விவரிக்கப்படுகிறது. ஸித்தாந்த மென்பதற்கு ப்ராமாணிகமாகப் பரிக்ரஹிக்கப்பட்ட அர்த்தமென்று தேர்ந்த பொருள். த்வைதமென்பது பேதம். இரண்டாயிருக்கும் தன்மை (த்விதா) எனப்படும். த்வைத மென்றாலும் அதுவே பொருள் பேதம் என்றதாயிற்று. அத்தோடு நஞ் சேர்ந்தால் அத்வைதம் என்றாகிறது. அபேதமென்று பொருள். விசிஷ்டஸ்ய அத்வைதம்—விசிஷ்டாத்வைதம். ஸமஸ்த சேதநாசேதந வஸ்துக்களோடு கூடின ப்ரஹ்மம் ஒன்று என்று அங்கீகரிக்கப்படுவதால் இந்த தரிசனம் விசிஷ்டாத்வைத மெனப்படுகிறது. சித்தும் அசித்துமாகிய இரண்டு தத்து

வங்கள் உண்மையில் கிடையாதென்றும் ப்ரஹ்மமொன்றே உள்ளதென்றும் கொள்ளுகின்ற பிறருடைய மதத்தைத் தள்ளி, மூன்று தத்துவங்களும் உண்மையாகவுள்ளனவென்று கொள்ளுவதே இந்த தரிசனத்தில் ஸாரமானது.

388. ச்ருதிவாக்யங்களை யுற்று நோக்கினால் அவற்றில் இருவகையான பாகுபாடு காணப்படும். (1) பேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். (2) அபேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். * க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவிச்தே தேவ ஏக:* என்பது முதலான ச்ருதி வாக்யங்கள் சேதந அசேதந—ஈச்வரரூப தத்வத்ரயத்தின் உண்மையைத் தெரிவிக்கும் முகத்தால் பேதத்தைக் காட்டுகின்றன. * நேஹ நாநாஸ்தி கிஞ்சந * * ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* *தத் த்வமஸி* இத்யாதிகளான ச்ருதிவாக்யங்கள் பலவகைப்பட்ட வஸ்துக்களில்லாமையைத் தெரிவிக்கும் முகத்தால் அபேதத்தைக் காட்டுகின்றன.

389. ஆக, ச்ருதிகளில் சிலவிடத்து பேதப்ரதிபாதநமும் சிலவிடத்து அபேத ப்ரதிபாதநமுமிருப்பதாகத் தேறுகையாலே பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாகிறது. விருத்தமான அர்த்தத்தைத் தெரிவிக்கையாகிற அவத்யம் ச்ருதிகளில் இடம் பெறத்தகாது. விரோதமோ உள்ளதென்று காட்டியாயிற்று. விரோதத்தைப் போக்கி ஸமந்வயம் காட்ட வேண்டிய பொறுப்பு விமர்சகுசலர்களான வைதிகர்களுக்குள்ளது. ப்ரஹ்மமொன்றுதான் ஸத்யமென்றுகொள்ளுகிறஅத்வைதிகள் அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து பேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை உபேக்ஷித்து விட்டார்கள். த்வைதிகளோவென்னில் பேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை உபேக்ஷித்துவிட்டார்கள்.

390. * யஸ்யாத்மா சரீரம், யஸ்யப்ருதிவீ சரீரம். ய ஆத்மநி திஷ்டந் * இத்யாதி வாக்யங்கள் பகவான் ப்ருதிவி முதல் ஆத்மா வரையிலுமுள்ள ஸகல வஸ்துக்களிலும் அந்தர்யாமி யாயிருக்கிறு னென்பதை ப்ரதிபாதிக்கின்றன; இவற்றை த்வைதிகளும் அத்வைதிகளுமான இரு வகுப்பினரும் அறவே விட்டிட்டார்கள். ஸுபாலோபநிஷத்து முதலான அந்தர்யாமி ப்ராஹ்மணவாக்யங்களுக்கு உபய மதத்திலும் ஆதரவு கிடையாதென்பது ஸ்பஷ்டம். ஆக, த்வைதாத்வைத மதங்களிரண்டிலும் அநேக ச்ருதி வாக்யங்களை அமுக்க்யார்த்தங்களாகக் கொள்ளுதல் உபேக்ஷித்தல் இத்யாதியான பலீயஸ்ஸான தோஷமுள்ளது. இத்தகைய தோஷம் சிறிதும் காணப் பெறாதது நமது மதமென்னுமிடம் அடுத்தபடியாக விவரிக்கப்படு.

391. கீழே யெடுத்துக்காட்டிய மூன்று வகுப்பான ச்ருதிவாக்யங்களையும் ஒரு நிகராக ஆதரிப்பவர்கள் விசிஷ்டாத்வைதிகளேயாவர். ஒருச்ருதி வாக்கியத்திலும் அமுக்க்யார்த்த கல்பநை யென்பது கிடையாது. எங்ஙனே யென்னில், கடைசியாக எடுத்துக்காட்டப்பட்ட * யஸ்யாத்மா சரீரமித்யாதிகளான ச்ருதி வாக்யங்களுக்கு கடக ச்ருதிகளென்று பெயர். பேதத்தையும் அபேதத்தையும் விரோத லேசமுமின்றிக்கே பொருந்தச் செய்ய வல்லவை அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்யங்கள்-என்கிற காரணத்தினால் இவற்றுக்கு கடகச்ருதிகளென்னும் பெயர் மிகப் பொருத்தம்.

392. * நேஹ நாநாஸ்தி கிஞ்சந * இத்யாதிகளான அத்வைத (அபேத) ச்ருதிகளினாலேற்பட்ட அபேதத்தையும் * க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர:* இத்யாதிகளான த்வைத (பேத) ச்ருதிகளினாலேற்பட்ட பேதத்தையும் பொருந்தவிடும் வழி கேண்

மின். சேதநாசேதந ஈச்வரர்களான மூன்று தத்துவப் பொருள்களில் ஸ்வரூப பேதம் உண்மையாதலால் *க்ஷரம் ப்ரதாந மித்யாதி பேத ச்ருதியானது பேதத்தைச் சொல்லி யிருப்பது பாங்கே. ப்ரஹ்மம் சேதநாசேதந விசிஷ்டமாய்க் கொண்டு ஒன்றேயாகிறபடியால் *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம இத்யாதியான அபேத ச்ருதிகளும் பொருந்தக் குறையில்லை. * யஸ்யாத்மாசரீரமித்யாதி அந்தர்யாமி ப்ராஹ்மண ச்ருதிகளானவை ஸர்வேச்வரனை ஸர்வாந்தர்யாமியென்று தெரிவிக்கும் முகத்தால் பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகின்றன என்பது நம் ஆசாரியர்களின் நிரூபணம்.

393. சிதசிதீச்வரர்களாகிற மூன்று தத்துவங்களிலும் தனிப்படக் கண் செலுத்தினால் பேதம் க்ரஹிக்கப்படுகிறது; அசேதநமாகிய சரீரம் வேறு; அதனுள்ளுறையும் சேதநன் வேறு; அவனுக்கும் அந்தர்யாமியான பரமாத்மா வேறு என்று பேத ப்ரதிபத்தி சாஸ்த்ர ஸம்மதமேயாகும். பல அவயவங்களின் கூட்டரவான சரீரத்திலே கை, கால், காது, மூக்கு முதலானவற்றைத் தனியே பார்க்குமிடத்து பேத ப்ரதிபத்தியும் 'அவயவஸங்காதம் ஒன்று' என்று பார்க்குமிடத்து அபேத ப்ரதிபத்தியும் பொருந்துகின்றது. தேவதத்தன் ஒருவன், யஜ்ஞதத்தன் ஒருவன் இத்யாதி வ்யவஹாரங்களில் தேவதத்தனுக்கும் யஜ்ஞதத்தனுக்கும் ஒருமை எங்ஙனம்? என்று விமர்சிக்கவேணும். 'தேவதத்த: க்ருச:, யஜ்ஞதத்த: ஸ்தூல:' இத்யாதி வ்யவஹாரங்களில் க்ருசத்வமும் ஸ்தூலத்வமும் சரீர தர்மமாகையாலே தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்கள் சரீர பரங்களே யென்று அறுதியிடப்படுகிறது. 'தேவதத்தோ மேதாவீ, யஜ்ஞதத்த: ப்ரதிபாவாந் இத்யாதி' வ்யவஹாரங்களில் மேதையும் ப்ரதிபையும் ஆத்ம தர்மமாகையாலே அந்த தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்களே ஆத்ம பரங்களென்றும் நிர்ணயிக்கப்படுகிறது. ஆத்மாவும் சரீரமும் ஒன்றல்ல வெவ்வேறுபட்டவை ஆக அநேக வஸ்துக்களிருக்கச் செய்தேயும் ஏகத்வவ்யவஹாரம் நிகழ்ந்து வருவது 'சரீர விசிஷ்டனான சரீரி ஒருவன்' என்னுமபிஸந்தியாலத்தனை.

394. இவ்வண்ணமாகவே 'ப்ரஹ்ம ஏகமேவ' என்றச்ருதியும் விசிஷ்டைக்யத்தைச் சொல்லுவதாகக் கொள்ளக் குறையில்லையே. ஏவஞ்ச பேதத்திற்கும், அபேதத்திற்கும் அபாயமொன்றுமில்லை யென்றதாயிற்று. சரீரங்களும் சரீரிகளுமாகிற நாநா வஸ்துஸத்பாவம் ப்ராமாணிக மாகையாலே அபலபிக்க வொண்ணாததே. இங்ஙனே விசிஷ்டைக்யமும் அநுபவஸித்தமாகையாலே அபலபிக்க வொண்ணாததே. ஆக உண்மையில் வெவ்வேறுபட்ட வஸ்துக்களும் சரீர சரீரி பாவ நிபந்தநமாகவே ஒன்றாக வழங்கப்படுவதாய் ஸித்திக்கையாலே அப்படிப்பட்ட சரீர சரீரிபாவத்தை யுணர்த்துகின்ற அந்தர்யாமி ப்ராஹ்மணாதி ரூபங்களான ச்ருதி வாக்யங்களுக்கு நமது மதத்தில் மிகுந்தகௌரவமுள்ளது. அத்வைதிகள் பேதச்ருதிகளை அநாதரிப்பது போலவும், த்வைதிகள் அபேத ச்ருதிகளை அநாதரிப்பதுபோலவும், நாம் ஒரு வகையான ச்ருதியிலும் அநாதரம் காட்டுகின்றிலோம். ஆகவே ஸர்வச்ருதி ஸாமரஸ்யம் நமக்கே யொழியப் பிறர்க்கில்லையென்பது தேறி நின்றது.

395 மதாந்தரஸ்தர்கள் ஒப்புக்கொள்ளாத பல அர்த்தங்களை நாம் ஒப்புக்கொண்டிருக்கின்றோம் நித்யஸூரிஸத்பாவம், எம்பெருமானுடைய கல்யாண குணாச்ரயத்வம், திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டத்வம் முதலானவை அவை. இவற்றை யெல்லாம் விட்டு சரீர சரீரிபாவத்தையே கொண்டு விசிஷ்டாத்வைத

மென்று பெயரிடுவதில் என்ன விசேஷமென்னில், கேண்மின். ஸித்தாந்தத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்ற அர்த்த விசேஷங்களுள் ஜகச்சரீரகத்வ மென்பதே ப்ரதாநமானது. ஆனதுபற்றியேயாம் இதுப்ரதாநமென்பது எங்ஙனமென்னில் ஸர்வச்ருதிகளினுடையவும் முக்கியமான அர்த்தத்தைத் தெரிவிப்பதாய், ஸர்வச்ருதிகளுக்கும் ஸாமரஸ்யத்தை நிர்வஹித்து வாதி விஜய ப்ரயோஜகமாயிருப்பதனாலே இதற்கு ப்ராதாந்ய மென்றுணர்க.

396 இந்த சரீராத்ம பாவத்தைத் தெரித்து கொள்ளாமையினாலன்றோ பிற மதத்தவர்கள் ஸர்வ ச்ருதிஸாமரஸ்யத்தை நிர்வஹிக்க மாட்டாமல் தளருகின்றனர் கள் குத்ருஷ்டிகளின் குசோத்யங்களை அவலீலயா பரிஹரித்துத் தருவது இந்த சரீராத்மபாவமே யென்க. இங்கு "யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம்" இத்யாதியான வேத ந்தாசார்யச்லோக ரத்நத்தைத் திடமாகக்கொள்க இந்த ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்தத்தை நன்கு தெரிந்துகொண்ட வொருவ்யக்தி நிற்கு மிடத்தில் விமதர்கள் எத்தனை பேர்கள் கூடி எவ்வளவு வாத கோலாஹலங்களைச் செய்தாலும் அவர்களுக்கு பங்கமேதவிர வேறில்லை யென்பது இதன் கருத்து.

397 சாரீரக மீமாம்ஸா சாஸ்திரத்திற்கு நாராயண பாரம்ய ப்ரதிபாதனத்தில் தான் முழு நோக்கென்னுமிடமும் முக்கியமாகஅறியத்தக்கது. ஜகத்காரண வஸ்து வாதிகளான வேதாந்த வாக்யங்களெல்லாம் ஸ்ரீமந் நாராயணனிடத்திலேதான் பர்யவஸிக்கின்றன என்று ஸூத்ரகாரர் தாமே ஸித்தாந்தம் செய்திருக்கிறாரென்பதை நன்கு உணரலாம்* அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா* என்று ப்ரஹ்ம விசாரத்தை ப்ரஸ்தாவித்து ஜந்மாத்யஸ்ய யத:* என்கிற அடுத்த ஸூத்ரத்தினாலே, 'எந்த வஸ்துவினிடத்தில் நின்றும் ஜகஜ் ஜந்ம ஸ்திதி லயங்கள் ஆகின்றனவோ அது ப்ரஹ்மம்' என்று ப்ரஹ்ம லக்ஷணம் காட்டினார் வியாஸர். வேதாந்தங்களில் ஜகத் காரண வஸ்துவைத் தெரிவிக்கின்ற வாக்யங்கள் ஒரே விதமாக இல்லை. பரஸ்பர விருத்தங்கள் போல் தோன்ற நின்றன என்பது பிரஸித்தமான விஷயம். ஏதோ ஒரு வஸ்துதான் ஜகத் காரணமாக இருக்க முடியுமே ஒழிய பல வஸ்துக்கள் அப்படியிருக்க முடியாது பரஸ்பர விருத்தங்கள்போல் தோன்ற நின்ற காரண வாக்யங்களாலே; இந்த நிச்சயம் எப்படி உண்டாகுமென்று தோன்றக்கூடிய சங்கையை ஸூத்ரகாரர் பரிஹரித்தே யிருக்கிறார்.

398 ஸூத்ரங்களின் பொருளை நிர்வஹிப்பதற்கு உபநிஷத்துக்களிலிருந்து விஷய வாக்யங்கள் கொள்ளப்படுகின்றன வென்பது யாவருமறிந்ததே. அந்த விஷயவாக்யங்களிலெல்லாம் சொல்லப்படுகிற தன்மைகள் ஸ்ரீமந்நாராயணனுக்கே அஸாதாரணங்களென்பது ச்ருதிபுராணாதிகளில் ப்ரஸித்தம்—என்கிற விதனை முக்கியமாகக் குறிக்கொள்க. ஆனந்தமயத்வம், ஆதித்ய மண்டலத்திலுள்ளிருத்தல், புண்டரீகாக்ஷத்வம், அபஹ்தபாப்மத்வம், மோக்ஷார்த்த உபாஸந விஷயத்வம், அக்நி இந்திரன் முதலிய ஸர்வ தேவதைகளுக்கும் அந்தர்யாமியா யிருத்தல் இத்யாதிகளான தரும விசேஷங்களுக்கு இருப்பிடமான வஸ்துவே ஜகத்காரணமாகக் கூடியதென்று நிஷ்கர்ஷிக்கின்ற ஸூத்ரகாரருடைய உள்ளத்தில் ஸ்ரீமந்நாராயணனே உறைந்திருக்கின்றா னென்பது பிராமாணிகர்களுக்கு அறிவரிதன்று. இனி, ஆதிசங்கராசாரியர் நாராயணபாரம்யத்தையே ஸ்தாபித்தவரென்பது நிரூபிக்கப்படுகிறது.

399 பகவத்பாதர் இயற்றிய விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் தேவதாந்தரங்களுக்கு அவரத்வத்தை நிலைநாட்டி ஸ்ரீமந் நாராயணனுக்குப் பரத்வம் ஸ்தா

பித்திருப்பது நன்கு விளங்கா நின்றது. பாஞ்சராத்ராகம ப்ராமாண்யாதிகரணத்தில், * உத்பத்த்யஸம்பவாத் * என்கிற ஸூத்ர பாஷ்யத்தில் "தத்ர பாகவதா மந்யந்தே" என்று தொடங்கி பாஞ்சராத்ராகம ப்ரமேயங்களான விஷயங்கள் மூன்றென்று ஸங்க்ரஹித்து. அவற்றுள் இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக் காட்டி, மூன்றுவதான ஒரு விஷயத்தில் மட்டும் வைமத்யம் காட்டியுள்ளார் பகவத்பாதர். தமக்கு ஸம்மதமாகக் காட்டின இரண்டு விஷயங்கள் இவை;-- (இங்கு அவருடைய பங்க்திகளையே உதாஹரிப்போம்.) "தத்ர யத்தாவதுச்யதே யோஸௌ நாராயண: ப்ரஸித்த: பரமாத்மா ஸர்வாத்மா இதி, தத் ந நிராக்ரியதே. யதபி தஸ்ய பகவத: அபிகமநாதிலக்ஷணமாராதநம் அஜஸ்ர மநந்யசித்ததயா அபிப்ரேயதே, ததபி ந ப்ரதிஷித்யதே; ச்ருதி ஸ்ம்ருத்யோரீச்வரப்ரணிதாநஸ்ய ப்ரஸித்தத்வாத்" என்பன அவருடைய பாஷ்ய பங்க்திகள். இவற்றால், ஸ்ரீமந் நாராயணனுக்கே பாரம்ய ப்ரதிஷ்டாபநத்தில் பகவத் பாதர் ஊக்கமுடையவரென்பது மறக்கத்தக்கதன்று. ஈச்வராதி ஸாமாந்ய சப்தங்களுள்ள விடங்களில் வாஸுதேவ நாராயணாதி விசேஷ சப்தங்களையிட்டு வியாக்யானம் செய்யத் தொடங்கினவரும் பகவத் பாதரே யாவர்.

400. பரப்ரஹ்மம் நிர்க்குணம் என்பது பிறருடைய வாதம். ஹேயகுணமில்லாமையைத் தெரிவிக்க வேண்டி உபநிஷத்து சில விடங்களில் ப்ரஹ்மத்தை நிர்குணமென்று சொல்லி யிருப்பதுண்டு. எண்ணிறந்த திருக்கல்யாண குணமுடைமையை ஓதியிருக்கின்ற ச்ருதிசதங்களுக்கு விரோதமின்றிக்கே நிர்வாஹம் செய்யவேண்டுமன்றோ; அங்ஙனே நிர்வஹிக்குமளவில் நிர்க்குண ச்ருதிகளுக்கு ஹேயகுண மில்லாமையைக் கூறுவதில் தாத்பர்யம் என்றே சொல்லித் தீரவேண்டும். ப்ரதாநம் முதலானவை ஜகத் காரணமாகக் கூடுமென்று நேர்ந்த சங்கைகளைப் பரிஹரியா நின்ற சாரீரக மீமாம்ஸையானது பெரும்பாலும் அதிகரணந்தோறும் பரப்ரஹ்மத்தினிடத்திலுள்ள திருக்குணங்களை யெடுத்துக்கொண்டே அத்தகைய குணங்களில்லாத வஸ்துகளுக்கு காரணத்வம் ஸம்பவிக்கமாட்டாது' என்று தலைக்கட்டுகின்றது. இக்காலத்தவர்களான அத்வைதிகள் தங்கள் நூல்களில் "ஆதிசங்கராசாரியரும் ஸகுணப்ரஹ்மத்தையும் ஸசரீர ப்ரஹ்மத்தையும் ஒப்புக்கொண்டிருப்பதுண்டு" என்றெழுதுகிறார்கள்: நையாயிகர்கள் 'உத்பந்நம் த்ரவ்யம் க்ஷணமகுணம் திஷ்டதி" என்பர்கள். பரப்ரஹ்மத்திற்கு உத்பத்தி ஒப்புக்கொண்டாலாவது அது க்ஷணகாலம் நிர்க்குணமாக இருக்கவுமாகும். முமுக்ஷுக்களும் முக்தர்களும் நித்யர்களுமான ஸமஸ்த ஜீவராசிகளையும் தன்னுடைய குணாநுபவத்தினாலேயே உஜ்ஜீவிப்பிக்குமதான ப்ரப்ரஹ்மம் க்ஷணமாத்ரமும் நிர்க்குணமாக இருக்ககில்லாது. .... .... *

நவரத்ந நவநிதியில் ஒன்பதாவதுநிதி முற்றிற்று.

ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் எழுதிய

நற்பொருளெழுநூறில் நான்காவது நூறு முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதே வேதாந்த மஹா குரவே நம:

# தூப்பல்மலரின் துயக்கு

( -பெங்களூர். பாலதந்வி பாலஸரஸ்வதீதாஸன். )

நம் தேசிகதர்சனத்தில் இதரமதஸ்தர்கள் ஏதேனும் குற்றங்குறைகள் வெளியிட்டால் அதை நாம் காணாதது போலவே யிருந்துவிடலாம். நம் தர்சனத்திலேயேயுள்ள அரைகுறையறிவாளிகள் ஸதாசார்ய ஸேவையில்லாமலும் ஒரு பாஷையிலும் ஞானமில்லாமலும் அஸம்பத்தமாக எதையாவது வெளியிட்டு வைத்தால் அதை நாம் மூடி வைப்பது நலமன்று; அது ஆபத்தாகமுடியும். தற்காலம் நம் தர்சனத்தில் விளங்கும் மடாதிபதிகள் மூவரும் ( அதாவது ) ஸ்ரீமத் அழகிய சிங்கர் ஆண்டவன் பரகாலஸ்வாமிகள் சிறந்த வித்வான்கள். இவர்களும் கண்டிக்காமல் விட்டுவிட்டால் அஸம்பத்தமான ப்ரலாபங்கள் அனர்த்தமாகவன்றோ முடியும். காஞ்சீபுரத்தில் 2-10-68ல் வெளியிட்ட தூப்பல்மலர் என்னும் புத்தகம் யார் தொகுத்ததென்பது தெரியவில்லை. கொண்டாட்டக் குழுவினர் என்று எழுதிவிட்டாலும் ஒருவரோ இருவரோ பொறுப்பாளிகளாக முன்னிற்கவேண்டுமல்லவா? படிப்பாளிகள் முன்னிற்பதாகத் தெரியவில்லையே. இதை நன்கு விளக்கிக் காட்டுவோம்.

முகப்பில் ஸ்ரீ தேசிகனருளிச் செய்த திவ்ய ஸூக்திகள் என மகுடமிட்டு ஸ்வாமி ஸாதித்தருளின நூல்களைக் குறிப்பிட்டு வருகையில் எத்தனை அஸம்பத்தங்கள் என்பதைப் பண்டிதர்கள் கவனிக்கவேணும். ஒவ்வொன்றாகக் காட்டுகிறேன். '' காவ்யக்ரந்தங்கள்'' என்று. மகுடமிட்டு [ ஸமஸ்யா ஸஹஸ்ரீ-லுப்தம்] என்று எழுதியுள்ளது. ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்பது தேசிகனுக்கு டைடலாகக் கிடைத்த பிருதேயொழிய இது ஒரு நூலின் பெயரல்ல. நூலின் பெயராக இருக்க முடியாதென்பதை அடுத்தபடியாக விளக்குவோம். இது ஸ்வாமியின்டைடல் என்பதை முன்னம் விளக்குவோம்.

ஸ்வாமி ஸாதித்த ஸ்தோத்ரபாஷ்யத்தின் முடிவில் '' ஸ்வகமிதி ஹரிதத்தம் யாமுநஸ்தோத்ர வ்ருத்த்யா வ்யவ்ருணுத நிகமாந்தாசார்யகம் வேங்கடேச: '' என்று பூர்வார்த்தம் ஸாதித்து, உத்தரார்த்தத்தில் ஸ்வாமி தாமே தம்முடைய பிருதுகளை விவரிக்கிறார்- '' அகணி ஸதஸி ஸத்பி: யஸ் ஸமஸ்யாஸஹஸ்ரீ கவி கதக ம்ருகேந்த்ரஸ் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர: '' என்று. கவிதார்க்கிக ஸிம்ஹம் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர் என்கிற பிருதுகள் போல ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்பதும் தமக்கு ஒரு பிருது என்பதை ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளார். ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்பது கௌரிசப்தம் போலவும் பஞ்சவடீசப்தம் போலவும் ஈகாராந்த சப்தமல்ல. வியாகரண சாஸ்த்ரத்தில் '' அத இநிடநௌ'' என்பது பாணிநிஸூத்ரம் அதன்படி இநிப்ரத்யயாந்தமாக நிஷ்பந்நமான சப்தம்-இந்த ஸமஸ்யாஸஹஸ்ரீ

என்பது. குணீ பணீ தநீ இத்யாதிசப்தங்கள்போலே நகாராந்தமாய் ஒரவெருரு நபரைக் குறிப்பதேயன்றி நூலைக் குறிக்க வல்லதன்று. ஸஹஸ்ரீ ஸஹஸ்ரிணௌ ஸஹஸ்ரிணஃ என்று சொல்லுவர்கள். ஸஹஸ்ரமுண்டு, ஸாஹஸ்ரமுண்டு; ஸஹஸ்ரீ என்று ஸஹஸ்ரார்த்தத்தில் கிடையாது.

இது நூலின் பெயராக இருக்குமானல் பாதுகாஸஹஸ்ரம் லக்ஷ்மீஸஹஸ்ரம் இத்யாதிகள் போலே அகாராந்த சப்தமாக இருக்குமேயல்லது ஈகாராந்த சப்தமாக இருக்கமாட்டாது. இதன் மருமம் நன்கு தெரியும்படி தெரிவிக்கிறோம். வடமொழியில் ஸங்க்யா வாசகமான சப்தம் முன்னேயிருந்து வேறொரு பதத்தோடு ஸமாஸம் செய்வதானல் அப்போது ஈகாராந்த சப்தமாகும். சதுஸ்ஸூத்ரீ, சதுரத்யாயீ, அஷ்டாத்யாயீ, அஷ்டச்லோகீ சதுச்ச்லோகீ இத்யாதி பரஸ்ஸஹஸ்ரம் காணலாம். அந்யத்ர போவானேன்! தேசிக திவ்ய ஸூக்தியிலேயே காணலாம். சததூஷணீ என்பது. சதஸ்ய தூஷணுநாம் ஸமாஹாரஃ சததூஷணீ. இவ்வண்ணம் ஸமஸ்யாநாம் ஸஹஸ்ரஸ்ய ஸமாஹாரஃ என்று விக்ரஹிக்க முடியுமானல் ஸமஸ்யாஸஹஸ்ரீ என்றாகும். சப்தம் ஸமாஸம் எதுவும் வாசியாமல் நிச்சப்தமாக இருந்துவிட்டு இப்போது வித்வான் பட்டம் போட்டுக்கொள்பவர்களுக்கு இதைப்பற்றி எவ்வளவு விரிவாக எழுதினுலும் புரிந்துகொள்ளவும் முடியாதே.

திருவயிந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் அச்சிட்ட தேசிக வைபவத்தில் ஸமஸ்யாஸஹஸ்ரீ என்கிற க்ரந்தத்தை தேசிகன் ஸாதித்ததாக எழுதி அச்சிட்டு வெளியிட்டார். அதைக்கண்ட ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகள்தாம் இங்கே மேலே குறித்த விளக்கங்களை வெளியிட்டார். "கோ ஹ்யந்யோ புவி மைத்ரேய" என்றாப்போலே அந்தஸ்வாமி தவிர வேறு யார் இந்த மருமங்களையெடுத்துக் காட்ட வல்லவர். பிறகு சேட்லூரவர் மன்னிப்பு கேட்டுக்கொண்டு நின்றாரே யொழிய வேறு ஒன்றும் செய்யவில்லை. இப்போது கிளம்பிய புது வித்வானுக்கு அந்த பழங்கதைகள் தெரியாதுபோலும். P. B. A. ஸ்வாமி தெரிவிக்கும் ஸம்ப்ரதாயார்த்தங்களை நாம் ஒப்புக்கொள்ள விரும்பாவிட்டாலும் ஸர்வஜநீநமான இத்தகைய சாஸ்த்ரார்த்தங்களை நாம் தலைப்பொறையாக ஒப்புக்கொண்டு தானே தீரவேண்டும்.

தேசிகன் நிகமபரிமலம் ஸாதித்ததாகவும் அது லுப்தம் என்பதாகவும் எழுதிக்கொண்டேயிருப்போம்; இதிலும், இதுபோன்ற இன்னுஞ்சில விஷயங்களிலும் நாம் பிடித்தபிடி விடாமலிருப்போம். ஸம்ப்ரதாயத்தைச் சேராத விஷயங்களில் P. B. A. ஸ்வாமி தெரிவிக்கும் ஔசித்யங்களை நாம் ஒப்புக்கொண்டுதான் தீரவேண்டும். "பகல் கண்ட குழியிலே இரா விழுவாரைப்போலே" என்று ஆசாரியர்கள் ஸாதிப்பதுண்டு; பகலிலேயே விழுவதென்பது விநோதமே. மேலே ப்ரஸ்தாவித்த தூப்பல் மலரில் தேசிகஸூக்தி பட்டியில் மற்றுமுள்ள கோளாறுகளையும் கேளீர். ஹரிதின திலகம் ஸ்வாமி ஸாதித்ததன்று என்பது திருப்புட்குழி ஸ்வாமி காலத்திலிருந்து ப்ரஸித்தம். ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி நியமனத்தினுல் திருக்குடந்தை ம. ம. R. V. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி இது பற்றி ஸஞ்சிகையும் வெளியிட்டிருக்கிறார். அவர் பதிப்பித்த தேசிகஸ்தோத்ராவளியிலும் "ஹரிதினதிலகம் ந தேசிகப்ரணீதம்" என்று சுருக்கமாகவுள்ளது. அந்யாதாஜ்ஞான விபரீதஜ்ஞான நிதியான சேட்லூரையங்காருடைய பட்டியே இந்த 1968 வித்வானுக்குந்தஞ்சமாயிற்றுப் போலும்,

குருபரம்பராஸார மென்கிற ரஹஸ்யம் தேசிக ரஹஸ்யங்களில் ஒன்று. அது தனிப் பட்டது. ஸ்ரீ ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு அடுத்து முற்பட்டது. அதை இந்தத் தூப் பல்மலர்வித்வான் குறிப்பிடவேயில்லை, ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார நூலைக் குறிப் பிட்டோமாகையால் அதன் உள்ளீடான இதனைத் தனிப்படக் குறிப்பிட வேண்டா வென்று நினைத்தது தலையான மருள். ஸ்ரீமத்-ஸாரத்தில் உபோத்காதாதிகார முள்ளது. அதுதான் அதற்கு உள்ளீடானது. குருபரம்பராஸாரம் தனிப்பட்ட தென்னுமிடம் பெரியார் திரளில் நிர்விவாதமானது. சிலர் அதை ஸ்ரீமத்-ஸாரத் தோடு சேர்த்து தலைமேல் ஸ்ரீமத்-ரஹஸ்யத்ரயஸாரே— குருபரம்பராஸார ঃ என்று தவருகப் பதிப்பித்திருப்பது கண்டு மருண்ட விவர் குருகுல வாஸ தூரஸ்தர் என்ப தையே வெளியிட்டுக்கொண்டாராகிருர்.

பந்துபா, கழல்பா, அம்மானைபா, ஊசல்பா, ஏசல்பா-என்கிற இவ்வைந்தை யும் குறிப்பிட்டு இவை லுப்தம் என்கிருர். "பந்து கழலம்மானை யூசலேசற்பாவும் நவமணிமாலையிவையுஞ் சொன்னேம்" என்கிற செய்யுள் உண்மையில் யாருடை யதோ, அவரியற்றிய பந்துப்பா முதலியவை லுப்தமாகாமல் லப்தமாயிருக்கின்றன வென்று **P.B.A.** ஸ்வாமி எழுதியிருப்பதை நாம் மறுக்க வேண்டியதே. பிரபந்த சாரம் பிள்ளையந்தாதி முதலான விஷயங்களும் நாம் மறுக்கவேண்டியதே ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்னும் விஷயம் மிகமிக அருவருக்கத்தக்கது. ப்ரஸ்தாவித்த மலரில் ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகிய சிங்கர் ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீமத் பரகால ஸ்வாமி ஆகிய இம் மஹாஸ்வாமிகளின் ஆசாஸன மிருப்பதால் அவர்கள் இம்மலரைக்கடாக்ஷித்தேயிருப் பர்கள் கடாக்ஷித்து இத்தகைய அஸம்பத்தங்களை எப்படி ஸஹித்திருக்கிருர் களென்று தெரியவில்லையே.

ஸ்வாமி ந்யாஸ விம்சதியில் ஆசார்ய லக்ஷணம் ஸாதிக்கும் முதல் சுலோகத் தில் "ஸ்காலித்யே சாஸிதாரம்" என்றருளிச் செய்ததை ஆசார்ய பதவியில் வாழ் பவர்கள் நிறைவேற்ற வேண்டாவா? ஸமஸ்யாஸஹஸ்ரீ ப்ரஸ்தாவம் தேசிகஸூக்தி களில் மேலே நாம் உதாஹரித்த ஓரிடத்தில் தானுள்ளது. (யஸ் ஸமஸ்யாஸஹஸ்ரீ) என்று ஸந்தேஹத்திற்கு ஈஷத்தும் இடமில்லாமலிருக்க, இதில் மருள் விளைந்த தென் ருல் அவருடைய வித்வத்தை என்னவென்று சொல்லுவது? அமர கோசத்தில் (அவச் யாயஸ் து நீஹாரஸ் துஷாரஸ் துஹிநம் ஹிமம்) என்றதை அவச்யாயஸ்து, நீஹாரஸ்து, ஷாரஸ்து, ஹிநம் ஹிமம் என்று பிரித்தவர்க்கு இவர் கிம்கநிஷ்டঃ கிமு ஜ்யேஷ்டঃ? என்னவேண்டியன்றோ இருக்கிறது.

நம்மடவர்களில் பலர் வித்வான்களென்று இறுமாந்திருக்கிருர்களே யொழிய விவேகசக்தியென்பது அடியோடு இல்லையேயென்று மிக மிக வருந்த வேண்டியதாயிருக்கிறது. எந்த வித்வானெழுதுவதைப் பார்த்தாலும் முழங்கால் சேறும் மார்புமட்டும் சேறுமாயிருக்கிறதேயொழிய நிர்மலமாய் நிஷ்கல்மஷமாய் ஸ்வச்சமான எழுத்து ஒன்றுகூடக் காணவில்லையே. தலையெழுத்து ஸரியாக இல் லையே. மூடி மூடிவைக்க வேண்டியவைகளை முற்றத்திவிடுவதற்குப் பதினாயிரமும் இருபதினாயிரமும் ஐம்பதினாயிரமும் செலவுசெய்ய முன்வருகிருர்களே! இதுவன்றோ மிக்க பரிதாபம்! ஆண்டி பெற்றது அஞ்சும் குரங்கு என்னும்படி நாடெல்லா மொரே நிகர்.

வடமொழியில் ஸிம்ஹபதம் ப்ரஸித்தமானது. இதற்கு வியாகரணமறுமம் தாங்கள் தெரிந்து கொள்ளாமற் போனாலும், தெரிவித்தாலும் தெரிந்துகொள்ளாமலே காலங்கழிப்பது எவ்வளவு சோசநீயம். இந்த ஸிம்ஹபதம் வேதத்தில் நூறு தடவை வருகிறது. அவ்விடங்களிலெல்லாம் எப்படி உச்சாரணம்? (ஸி) என்கிற எழுத்தின் பக்கத்திலே அநுஸ்வாரத்தை எப்படி உச்சரிக்கிறார்கள்? என்பதைத் தெரிந்து கொள்ள மாட்டாதவர்கள் வைதிக கோஷ்டியில் சேரமுடியுமா? ஒவ்வொரு மடாதிபதிகளும் ( ஸிஹ்ம-ஸிஹ்ம ) என்றே எழுதிவரவேண்டியதென்று பிடிவாதங் கொண்டிருப்பது பரிஹாஸ்யமன்றோ. கவிதார்க்கிக ஸிம்ம, லக்ஷ்மீந்ரு ஸிம்ம இத்யாதிகள் மடாதிபதிகளுக்குமன்றோ அவர்ஜநீயங்களாயிருக்கின்றன. நாற்பதைம்பது வருஷங்களாக அடிபட்ட விஷயங்களில் பிடிவாதமா? அவிவேகமா? என்று யார் நிஷ்கர்ஷிப்பது?

தேசிக பக்தர்களான நம்மவர்களின் எழுத்துக்களில் இப்படிப்பட்ட விபரீதங்கள் அணுவளவேனும் காணலாமோ? படிப்பில்லாத நவீனவித்வான் புஷ்கரணி புஷ்கரணி என்றே ஆயிரந்தடவை எழுதினாலும் ஏற்கும். ஆஸ்தான நிர்வாஹகர்கள் பிறர்க்கு ஸ்காலித்யே சாஸிதாக்களாக விளங்க வேண்டியிருக்க, தாங்களே ஸ்காலித்யநிதிகளாக விளங்கி வருவது தேசிகனுக்கல்லவா இழுக்காகும். தேசிகஸம்பந்தம் நமக்கு ஸ்வதஸ்ஸித்தமாக இருந்தால் இப்படி பிறரும் பலரும் பரிஹஸிக்க. வேண்டும்படியான ஸ்காலித்யங்கள் நேருமா என்று நம்மவர்களே சங்கிக்கலாகிறதே. புநீதா என்றும், ப்ரசலிஷ்யமாணஃ என்றும் வித்வான்கள் எழுதலாமா?

திருமங்கையாழ்வார் ஒரு பெருமாளை * ஏசநின்ற எம்பெருமான் என்கிறார். எம்பெருமான் ஏசநிற்கலாம்- நாம் ஏச நிற்கலாமா? மற்றோராழ்வார் "பற்றாதாரெல்லாம் சிரிப்ப" என்கிறார். பற்றாதார் சிரிப்பது வியப்பன்று; பற்றினவர்களுங் கூடச் சிரிக்க நிற்கலாமா?

(தொடரும்)

---

# திருப்புகுழி ஸ்வாமியின் ஸபாவைராக்யம்

— ஸ்ரீமதுபயவே. கெட்டம். சக்ரவர்த்தியாசார் —

"அதீதமத்யாபிதமார்ஜிதம் யசஃ" என்னப்படுமவர்களில் அக்ரேஸரரான திருப்புட்குழி ஸ்வாமி வாசித்து முடித்தபின் ஆங்காங்கு ஸபைகளுக்குச்சென்று வாக்யார்த்தம் சொல்லி வெற்றி பெற்றுப் புகழ் பெறவிரும்பி முன்னம் புதுக்கோட்டைக்கு ஏள்ளியாச்சு. அங்கே ஆஸ்தான பண்டிதர் சிறுவித்யார்த்திகளைக் கேட்கிற ரீதியில் ஸ்வாமியை நோக்கி "ப்ரத்வம்ஸாபாவ லக்ஷணம் உச்யதாம்" என்றார். உடனே ஸ்வாமி "ஸாதித்வே ஸதி அநந்தத்வம் தல்லக்ஷணம்" என்றார். 'கிம்நாம அநந்தத்வம்?' என்றார் ஆஸ்தாந வித்வான். 'த்வம்ஸாப்ரதியோகித்வம் தத்' என்றார் ஸ்வாமி. அதற்கு ஆஸ்தான வித்வான் "த்வம்ஸலக்ஷணே த்வம்ஸாந்தர்ப்பாவநே ஆத்மாச்ரயோ ந கிம்?" என்றார். இது கிள்ளிக்களையக்கூடிய கேள்வியாயிருந்தும் ஸ்வாமிக்கு ஒன்றும் ஸ்புரிக்காமையினாலே வெகு நாழிகை வரையில் தலைகுனிந்தேயிருந்துவிட்டார். இதற்குச் சொல்லியான பிறகு தான் இன்று ஸபா விஸர்ஜனம் என்று சொல்லி விட்டாராம் ஆஸ்தான வித்வான். ஸ்வாமி "ஸ்தூலஸ்தூலாந் நயநமுகுலைர் பிப்ரதோ பாஷ்பபிந்தூந்" என்னும் நிலைமையிலிருந்த

வாறே பக்கத்திலிருந்த மாண்டுக்யம் மஹாதேவ சாஸ்த்ரிகள் மஹாபண்டிதோத்த மரான ஸ்வாமியை தர்க்கஸங்க்ரஹத்தில் கேள்வி கேட்டது அந்தி என்றுகோஷிக்க, ஸ்வாமி எழுந்து சென்றுவிட்டார். ஏதோ சகுனத்தடை என்று ஸாதித்தபடி. அது முதல் எந்த ஸபைக்கும் ஏள்ளுவதில்லையென்று திடமான உறுதியுடனிருந்து விட்டார் திருப்புட்குழி ஸ்வாமி. .... .... ....

# திருப்புட்குழி ஸ்வாமியின் அற்புதமான குருபக்தி

ஸ்ரீ பெரும்பூதூரில் எம்டார் ஜீயர்ஸ்வாமி யென்று ப்ரஸித்தராக எழுந் தருளியிருந்த கப்பியாமூர்ஸ்வாமிஸன்னிதியில் (பூர்வாச்ரமத்தில்) நியாயமீமாம் ஸைகளையதிகரித்தவர் திருப்புட்குழிஸ்வாமி. அந்த ஜீயர்ஸ்வாமி ஒருவிசை தேவப் பெருமாளுடைய வைசா கோத்ஸவத்திற்கென்று நாலு நாள் முன்னமே புறப்பட்டு பவழவண்ணர் ஸன்னிதியில் எழுந்தருளியிருக்கிறு ரென்று கேள்விப்பட்ட திருப்புட் குழிஸ்வாமி அந்த ஜீயர்ஸ்வாமிக்கு மடாதிபதிகளுக்குப் போல் தேவப் பெருமாள் ஸன்னிதியில் மரியாதை பண்ணிவைக்க வேணு மென்று திருவுள்ளம் பற்றி ஸபரி வாரராகப்புறப்பட்டெழுந்தருளி ப்ரார்த்தித்தாராம். "நான் ஸாதாரணஸந்ந்யாஸி யே யொழிய மடாதிபதியல்லேன்; எனக்கு மர்யாதை வேண்டா; பேரருளாளன் எப்படியும் பெரியகாஞ்சிக்கு எழுந்தருளப் போகிறபடியால் இங்கே ஸேவித்துக் கொள்ளுகிறேன். திருப்புட்குழி யெம்பெருமானை ஸேவிக்கப்பெற்றதில்லை; அது ப்ராப்தமாகும்படி உம்முடைய சிஷ்யர்களில் ஒருவரைத் துணையனுப்பி வைப்பீரா? என்று கேட்டாராம். அதற்கு திருப்புட்குழிஸ்வாமி "இப்படியும் ஸாதிக்கலாமோ? ஆளிட்டு அந்திதொழுவதுண்டோ? அடியேனை க்ருதக்நனுக்கத் திருவுள்ளமோ? இப் பேரதே புறப்பட்டருளலாம், அடியேனே, அநுசரணுக விடை கொள்ளக் காத்திருக் கிறேன்" என்று ஸாதிக்க, ஜீயர் ஸ்வாமி இவருடைய குருபக்திக்குப் போரவுகந்து சில வார்த்தைகள் அருளிச் செய்ய, திருப்புட்குழி ஸ்வாமி "ஆசார்யாதிஹ தேவதாம் ஸமதிகாம் அந்யாம் ந மந்யாமஹே- என்றிருக்குமடியேனை யதேஷ்டவிநியோ கார்ஹனுக்கிக் கொள்ளவேணும்" என்றுஸாதித்து அப்படியே அனுஷ்டித்துக் காட் டினபடி. "அடியேனைச் செயல் நன்ருகத் திருத்திப்பணி கொண்ட ஸ்வாமிக்கு என் செய்வேன் என்செய்வேன்!" என்று சொல்லி அங்கேயே ஏழெட்டு நாள் படுகாடு கிடந்தாரென்று ப்ரஸித்தம். .... .... .... .... *

# அத்ருஷ்டார்த்த இதிஹாஸமாலையில் இருபத் தேழாவது குஸுமம்-

சின்ன காஞ்சீபுரம் குறுக்குத் தெருவில் சிவகொழுந்து முதலியாரென்பவர் ஸகிந்தராபாத் சென்று புகையிலை வியாபாரம் செய்து பிரபல தனவந்தரானுர். அவரிடத்தில் இரண்டு தாதாசாரியர்கள் Clerk களாக இருந்தார்கள். அவர்களிரு வரும் அந்த முதலியாரிடம் நீங்கள் அத்ருஷ்டார்த்தம் செய்து கொண்டால் நன்ரு யிருக்குமென்று அடிக்கடி சொல்லி வந்தார்கள். அதன் விவரத்தை அவர் கேட்டுத் தெரிந்து கொண்டார். அது செய்து கொள்ள வேணுமென்றும் அபிப்ராயப்பட்டார். ஒரு நாள் அவர் காஞ்சீபுரம் புறப்பட நேர்ந்தது. அப்போது அவர்களிடம் இதைச்

சொல்லி அத்ருஷ்டார்த்தத்திற்கு ஏற்பாடு செய்யும்படி கோரினர். அவர்கள் காஞ்சீ புரத்திலிருந்த அய்யா கிருஷ்ணமாசாருக்கு லெட்டர் எழுதிக் கொடுத்தார்கள். ' இவர் பெரிய தனிகர் ; அத்ருஷ்டார்த்தம் செய்து கொள்ள விரும்புகிருர். தகுந்த ஏற்பாடு செய்யவேண்டியது " என்று எழுதிக்கொடுத்து, அவரிடம் சென்ருல் தகுந்த ஏற்பாடு செய்வார் என்று சொல்லியனுப்பினர்கள். முதலியார் காஞ்சீபுரம் வந்து அய்யா கிருஷ்ணமாசாரைச் சந்தித்து லெட்டரைக் கொடுத்தார். அப்போது அவர் கையில் மூக்கண்ணுடியில்லாமலிருந்ததனுல் ' கடிதத்தைப் பிறகு பார்க்கிறேன், என்ன சமாசாரம் ' என்று கேட்டார். ' அத்ருஷ்டார்த்தம் செய்து கொள்ள ஏற் பாடு பண்ணும்படி உங்கடவர் எழுதிக்கொடுத்திருக்கிருர் ' என்ருர். அதற்கு அவர் ஏற்பாடு பண்ணவேண்டியது என்ன இருக்கிறது? நானே செய்கிறேன், நாளை காலை உபஹாரங்களுடன் வாருங்கள் என்ருர். அவர் புறப்பட்டுப் போய்விட்டார். மறு நாள் அவர் வரவேயில்லை. அவர் காமாக்ஷியம்மன் தெருவில் தங்கியிருக்கிருரென்று தெரிந்து கொண்டு கல்யாணபுரம் பிரம்மசாரியென்கிற தம்முடைய சிஷ்யப் பிள்ளையை யழைத்துக்கொண்டு தேங்குழல் அதிரசம் பிரசாதத்துடன் அங்கே சென் ருர். முதலியாரைப்பார்த்து நேற்று வரவில்லையேயென்ருர். உடம்பு சரியில்லை, நாளைக்கு வருகிறேன் என்று சொல்லியனுப்பி விட்டார். மறுநாளும் 12 மணி வரை எதிர்பார்த்து, வராமற்போகவே மறுபடியும் இட்டிலி பிரசாதத்துடன் சென்ருர், (அப்போது முதலியாருக்கும் கிருஷ்ணமாசாருக்கும் நடந்த ஸம்பாஷணை.

முதலியார்—நான் அக்கரை கொள்ள வேண்டிய விஷயத்தில் தங்களுக்கு எதுக்கு இவ்வளவு அக்கரை?

( கிருஷ்ணமாசார் ) அதென்ன அப்படி கேட்கிறீர்களே? சிஷ்யன் ஆசாரியரிடம் வந்து சேருகிறவரையில்தான் சிஷ்யனுடைய பொறுப்பு; பிறகு ஆசாரியனுடைய பொறுப்பு என்பது சம்பிரதாயம். நீங்கள் என்னைத் தேடிவராமலிருந்தால் நான் உங்களைத் தேடிவர ப்ரமேயமேயில்லை. நீங்கள் என் குறடேறிவந்த பின் என் பொறுப்பாக ஆய்விட்டீர்கள்; ஆகவே அக்கரை என்னுடையதாச்சு.

( முதலியார் ) நான் உங்களிடம் வந்ததுண்டு; அத்ருஷ்டார்த்தம் நீங்கள் பண்ண வேணுமென்று நான் கோரவில்லையே.

( க்ருஷ்ண ) அப்படியானல் என்னிடம் கடிதம் கொண்டு கொடுப்பானேன்?

( முதலியார் ) நான் கொடுத்த கடிதத்தை வாசித்துப் பார்த்தீர்களா? அதில் என்ன இருக்கிறது? உங்களையே பண்ணச்சொல்லி யிருக்கிறதா?

(க்ருஷ்ண) அப்பவே வாசித்துப் பார்த்தேன்; முட்டாப்பசங்கள், அத்ருஷ் டார்த்தத்துக்கு ஏற்பாடு பண்ணவேணுமென்று எழுதியிருக்கிறதுகள். ஏற்பா டென்னவந்தது. கலியாணமா? கார்த்தியா? எதற்குஏற்பாடு?

(முதலியார்) நீங்களே பண்ணவேண்டியதென்று அதில் எழுதியிருக் கிருரோ? அப்படியெழுதியிருக்க வில்லையே.

(க்ருஷ்ண) நளைகாலை உபஹாரங்களோடு வாருங்கள் என்று நான் சொன் னேன்; நீங்கள் அப்ரதிஷித்தம் அநுமதம்பவதி என்னும்படியாகப் போனீர்கள். உங்களுக்கு இஷ்டமில்லையானல் நான் வலிகட்டாயப்படுத்த வரவில்லை.

(முதலியார்) இங்கே கூரத்தாழ்வான் ஸன்னிதியில் இளங்காடு ஸ்வாமி என்றொருவர் ராமாயணம் சொல்லுகிறார். நேற்றிரவு கேட்கப்போயிருந்தேன். ரொம்ப நன்றாச் சொல்றார்கள். அவரிடம் சேஞ்சுக் கொள்ளலாமென்று சிலர் சொல்லுகிறார்கள். சேஞ்சுக் கொள்ளலாமா?

(க்ருஷ்ண) ஐயோ அவர் ரெங்கூன் போய் வந்தவராச்சே.

(முதலியார்) அதனாலென்ன? நான்கூட எத்தனையோ தடவை ரங்கூன் ஸிலோன் பினாங்கு பல தீவுகள் போய்வந்திருக்கிறேன். அதைப்பற்றி எனக்கென்ன?

(க்ருஷ்ண) அது தவிர, அவர் எங்கடவாளுடைய சிஷ்யராச்சே; அவருக்கு அதிகாரமில்லையே. சரி, உங்களிஷ்டம்போல் செய்வது, நான் போய்வரட்டுமா

(முதலியார்) சற்றுஇருங்கள் ( என்று சொல்லி உள்ளே போய்வந்து ஐந்து ரூபா வைத்து தாம்பூலம் கொடுத்தார்.

(கிருஷ்ணமா) நான் கொண்டுவந்து கொடுத்த பிரசாதங்களே இருபது ரூபாய்க்கு இருக்குமே. ( அதற்கு மேல் நடந்த விரஸங்கள் வேண்டா.) அத்ருஷ்டார்த்தத்துக்கும் அத்ருஷ்டம் வேணும் என்று சொல்லிக் கொண்டே வந்துவிட்டார் கிருஷ்ணமாசார்- .... .... .... .... .... *

# ஸ்ரீ கோஷ்டீபுரம் ஸ்வாமியின் அநுபவமும் அருள்மொழியும்.

தேவப்பெருமாள் கங்கைகொண்ட மண்டபம் சேர்ந்தாயிற்று. வேதபாராயணம் முடிந்தவுடனே நாவல்பாக்கம் ஸ்வாமி முதலானவர்கள் ஸந்தியாவந்தனம் பண்ண மங்களதீர்த்தத்திற்குப் புறப்பட்டார்கள். கோஷ்டீபுரம் ஸ்வாமி அருளிச்செயல் கேட்கப் பந்தலுக்குள்ளே யெழுந்தருளுகையில் அனுஷ்டானத்திற்குத் தம்மோடுகூட வரும்படி யழைத்தார்கள். அடியேனுக்கு ஆயிற்று என்று ஸாதித்து விட்டார். "அது எப்படியாகும்? பெருமாள் மாலை ஐந்து மணிக்குள் புறப்பட்டாச்சுதே; அதற்குள்ளாகவா அனுஷ்டானமாய் விட்டது?" என்றார்கள். 'அந்த விசாரம் உங்களுக்கு ஏதுக்கு? எழுந்தருள்க' என்றார் கோஷ்டீபுரம் ஸ்வாமி. அப்போது நாவல்பாக்கம் ஸ்வாமி "அவர் முக்கால் தென்கலையாச்சே, அவரை ஏன் அழைக்கிறீர்கள்?" என்றார். அதுகேட்ட கோஷ்டீபுரம் ஸ்வாமி. "ஏன் அப்படி குறைவாகத் திருவுள்ளம் பற்றினபடி? அடியேன் ஒன்றரை தென்கலையாச்சே" என்றார். எல்லாரும் கல்லென்று சிரித்து விட்டார்கள். மற்றவர்கள் அதன் மேல் வாயெழும்பாமல் போய்விட்டார்கள். (கோஷ்டீபுரம் ஸ்வாமி கோஷ்டித்தலைவர் )

ஒரு தோட்டவுத்ஸவத்தன்று மாலை கோஷ்டீபுரம் ஸ்வாமியை ஏதாவது உபந்யஸிக்க வேணுமென்று சிலர் வேண்ட, "கிம் வா கரீச! க்ருபணே மயி ரக்ஷணீயே" என்கிற பஞ்சாசத் ச்லோகத்தை யெடுத்துக்கொண்டு உபந்யஸிக்கையில், சிலர் 'ஸந்த்யாகாலமாயிற்று, நிகமிக்கவேணும்' என்ன, அப்போது * கெடுமிடராய வெல்லா மென்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் "நாளும் கொடுவினை செய்யுங் கூற்றின்தமர்களும் குறுககில்லார்" என்ற விடத்து ஈடு முப்பத்தாறாயிரத்திலே

"ஒரு திருவேட்டையிலே பட்டர் திருவூற்றங்கரையிலே பேரோலக்கமாக விருக்க 'ஸந்த்யையானது' என்று சிலர் விண்ணப்பஞ்செய்ய, நாம் பெருமாளழகிலே துவக்குண்டு இன்றொருநாளும் கர்த்தவ்யத்திலே அல்பம் தாழ நின்றோமென்றால் இது குற்றமாக யமன் கேட்கவோ? ஒரு ராஜா இருந்து நாட்டுக்கணக்கு கேட்டுக்கொண்டு வாரா நின்றால் ராஜாவுக்கு அந்தரங்கனாயிருப்பானொருவன்பேரை வாசித்தால் 'ஓங்காண், அதுகிடக்க மேற்சொல்' என்றால் பின்னையொருகாலமும் அப்பேரெடுத்து வாசிக்கப் பெறாதுகாண் என்றாராம். இந்த ப்ரஸங்கத்திலே * சொல்லாய் திருமார்பா! உனக்காகித் தொண்டுபட்ட நல்லேனை, வினைகள் நலியாமை நம்பு நம்பீ! * என்கிற பெரிய திருமொழிப் பாசுரத்தையெடுத்துப் பரக்க உபந்யஸித்தருளினார்" என்றுள்ள ஸ்ரீஸூக்தியை யெடுத்துரைத்து அன்றைய உபந்யாஸம் அதுவேயாக்கினபடி. ....

*** *** *** ***

—தர்ம சாஸ்த்ரஸந்தேஹ பரிஹாரம்—

மாம்பாக்கம் விஜயராகவாசாரியர் பெண்ணை மணப்பாக்கம் வரதாசாரியர் குமாரனுக்குக் கொடுத்து விவாஹம் நடந்தது. விவாஹமான இரண்டொருவருஷத்திற்குள் ஸம்பந்திகளுக்குள் மனஸ்தாபம் பிரபலமாக ஏற்பட்டுப் பெண்ணையழைத்துக் கொள்ளாமலே யிருக்க நேர்ந்து விட்டது- இப்படி யிருக்கையில் வரன் நோய்வாய்ப்பட்டு சிகித்ஸைக்காக சென்னைபுரிக்கு அழைத்துச் செல்லப்பட்டான். தங்கசாலை வீதி 48 நெ- கிருஹத்தில் இருந்து வந்தார்கள். பிள்ளைக்கு நோய் முற்றி விட்டது- ஜீவிதஸந்தேஹம் ஏற்பட்டதனால் 'உடனே வந்தால் பார்க்கலாம்' என்று பெண்ணின் தகப்பனாருக்குக் கடிதமெழுதினார் பிள்ளையின் பிதா- அக்கடிதம் கிராமத்திற்கு வந்துசேரச் சிறிது தாமதமாயிற்று- அதற்குள் நடந்த செய்தி என்னவென்றால், ஒரு ஜோஸ்யர் வந்து நோயாளியான பிள்ளையைப் பார்த்து 'ஜாகையை மாற்றினால் அநுகூலமாகும்; மேலும் மதனபல்லிக்கு அழைத்துக் கொண்டுபோனால் விரைவில் குணமாகும்' என்றார்- உடனே பிள்ளையின்குடும்பம் மதனபல்லிக்குச் சென்று சேர்ந்துவிட்டது.

பெண்ணின் பிதா தாமதித்துக்கிடைத்த கடிதத்தைக்கண்டு மிகவும் வியாகுலப்பட்டு பெண்ணுடன் சென்னைக்குச்சென்று தங்கசாலை 48. நெ கிருஹத்திற்குச் சென்றார். அந்த வீட்டில் பல குடித்தனங்களாதலால் ஒரு குடித்தனக்காரர் இறந்துபோய் தஹனமாகித் திரும்பி வந்து பிரளயமாக அழுது கொண்டிருக்கிறார்கள். பெண்ணின் பிதா இறந்தவர் யார்? என்று விசாரியாமலே தன் ஜாமாதாவே இறந்து விட்டதாக நிச்சயித்துக்கொண்டு எப்போது இறந்தாரென்று அங்கே ஒருவரைக் கேட்க 'இன்று காலை 7 மணிக்கு இறந்தார்; யாரோ உறவினர் வரவேணுமென்று எதிர் பார்த்திருந்தார்கள்; வந்ததும் வராததும் எனக்குத்தெரியாது; மாலை 5 மணிக்கு தஹனம் பண்ணி விட்டு வந்தார்கள்' என்று அவர் சொன்னார். ஏற்கனவே ஸம்பந்திகளுக்கு மனஸ்தாபம் வலுத்திருந்தபடியால் இந்த பெண்ணின் பிதா உள்ளே போகாமலே பெண்ணுடன் மாம்பாக்கத்திற்குத் திரும்பி விட்டார். ஜாமாதா மதன பல்லிக்குப்போயிருக்கும் விஷயம் இவர்களுக்குத் தெரிய ப்ரஸக்தியில்லையாயிற்று. அவர்களும் ஜாகை மாறுதலைத் தெரிவிக்காமலேயிருந்து விட்டார்கள். மாம்பாக்கம் சென்றவர்கள் திருவத்யயநாந்தம் சரமக்ருத்யங்களை முடித்து விட்டார்கள். பெண்ணின் பிதா பரமவைதிகராகையாலே பெண்ணுக்கு வபனமும் செய்வித்தாய் விட்டது. தலைமாஸ்யத்தன்று நிமந்த்ரண ஸ்வாமி உள்ளே பூஜித்துக்கொண்டிருக்கையில் பிள்ளையின் கைப்பட ஒரு கடிதம் பெண்ணுக்கு வந்தது; ஜாகை மாற்றினதிலிருந்து நல்ல ஆரோக்யமென்றும், இன்னும் 15 நாள் மதன

பல்லியிலே இருந்துவிட்டு சென்னை வந்து சேருகிறேமென்றும் அதிலெழுதியிருந்தது. இக்கடிதம் பெண் ணகையிலேயே நேராகக்கிடைத்தபடியால் தானே வாசித்துப் பார்த்து விட்டு ஒன்றும் தோன்றுமல் படுக்கையறையில் சென்று கதவைத் தாளிட் டுக்கொண்டு புலம்பிக்கொண்டிருந்தாள். உள்ளே புஜித்துக்கொண்டிருந்தவர் இச் செய்தியையறிந்து எழுந்து கையலம்பிக்கொண்டு போய் விட்டார்.

இனிமேல் அப்பெண் செய்யவேண்டியதென்னவென்று தர்மசாஸ்த்ரம்கேட்க கோஷ்டீபுரம் ஸ்வாமியிடம் வந்தார்கள். நாவல் பாக்கம் ஸ்வாமி என்ன ஸாதிக் கிருரென்று விசாரிக்கச் சென்ருர். தம்பதிகளை தனியாகக் குடிவைத்து வாழ்க்கை நடத்த அந்த ஸ்வாமி ஸாச்சாச்சுது. கரளபாக்கம் ஸ்வாமி பெண்ணுக்குத் தலைமயிர் வளர்ந்த பிறகு புநः கந்யாதானம் பண்ணி மாங்கல்ய தாரணம் செய்வித்து எல்லா ரோடும் கலந்து வாழச்செய்யலாமென்ருர். அந்த ஸமயம் கோஷ்டீபுரம் ஸ்வாமி கரும்பட்டியெழுந்தருள நேர்ந்தபடியால் தர்மசாஸ்த்ர க்ரந்தங்களைப் பரிசிலனை செய்து தெரிவிப்பதாகச்சொல்லி யெழுந்தருளியாச்சுது. அந்த தம்பதிகளின் த்ருதிய குமாரர் இப்போது மதுராந்தகம் கலாசாலையில் வாசித்து வருகிருர். .... *

# அத்ருஷ்டார்த்த இதிஹாஸமாலையில் ஒன்பதாவது குஸுமம்.

திருக்குடந்தை அம்மாஸத்ரம் சேஷாசாரியர் ஸ்வாமி ஹயக்ரீவமந்திரம் கட்டி வைத்து வித்யார்த்திகளுக்கு போஜனவஸதியுடன் வேதாந்த ப்ரவசனம் செய்யத் தொடங்கினுர். தம்மிடத்திலேயே சக்ராங்கனமும் அத்ருஷ்டார்த்தமும் செய்து கொள்பவர்களுக்குத்தான் போஜன ஸௌகரிய மளிப்பதாக நிர்ப்பந்தம் வைத்துக் கொண்டார். இதையறியாத ஒரு ஸ்வாமி அவரிடம் வந்து 'நானும் இங்கேயே யிருந்து காலக்ஷேபம் செய்கிறேன்' என்று சொல்லி கோஷ்டியில் அந்வயித்திருந்தார். நாலைந்து நாள் பொறுத்து ஸ்வாமி இவரை யழைத்து "இவ்விடத்து நிபந்தனை உமக்குத் தெரியாது போலும்; தெரிவிக்கிறேன்; நம்மிடத்திலேயே சக்ராங்கனமும் அத்ருஷ்டார்த்தமும் ஆனுல்தான் இங்கே ப்ரஸாதம் கிடைக்கும்" என்ருர். அதற்கு அந்த ஸ்வாமி 'அடியேனுடைய தகப்பனுரிடத்திலேயே இவ்வையிரண்டுமாய்விட்டது' என்ருர். அதற்கு ஸ்வாமி "அது எனக்குத் தெரியாது; இங்கே போஜனமாகவேணு மாஞல் இந்த நிபந்தனைக்கு உட்பட வேணும்" என்று சொல்லி விட்டார். ஸரி, அப்படியே ஆகட்டும் என்று அவர் இசைய, சக்ராங்கனத்திற்கும் அத்ருஷ்டார்த் தத்திற்கும் நாளிட்டாயிற்று. ஸுதர்சன ஹோமமும் ஆயிற்று தாபஸம்ஸ்காரத் திற்கு சிஷ்யர் தோளைக் காட்டவேண்டியிருக்க வயிற்றைக் காட்டி இங்கே பண்ணும் என்ருர். அதென்ன? என்று கேட்க, 'க்ரமமாக ஆய்விட்டதென்று ஏற்கனவே விஜ்ஞாபித்தேன்; இனிச் செய்து கொள்வது வயிறுவளர்க்க வேயாதலால் வயிற்றிலே பண்ணிக் கொள்வதுதானே நியாயம்' என்ருர் சிஷ்யர்- ஸ்வாமிக்கு முகம் கறுத்து விட்டது. மேற்செய்திகள் ப்ரஸித்தம். .... .... .... ....

# திருவயிந்திரபுரப் பாசுரங்களில் தேசிகவைபவம்.

ஆழ்வார்களனைவரும் தம்தம் பிரபந்தங்களில் தேசிகவைபவத்தை ஸ்பஷ்டமாகப் பொறித்து வைத்திருக்கிறார்களென்பது அடுத்த பக்கத்திலிருந்து விவரிக்கப்படும். தேசிகனுக்கு திருவயிந்திரபுரம் விசேஷ அபிமான ஸ்தலமாதலால் அந்த ஸ்தலத்துப் பாசுரங்களில் திருமங்கையாழ்வார் பெரும்பாலுங்காட்டியுள்ள தேசிகன் பெருமை இங்குத் தனிப்பட நிரூபிக்கப்படுகிறது.

1. இருந்தண்மாநிலமென்று ஆரம்பம் இரும்—தேசிகனே இன்னமொரு நூற்றாண்டிரும். தண்—தண்காவிலே திருவவதரித்தவரே! என்றபடி. மூன்றாமடியில் அளிகுலம் என்று வண்டின் ப்ரஸ்தாவமுள்ளது. வண்டுக்கு த்விரேபம் என்று பெயர்; வேதாந்தாசார்யவர்ய:-என்ற திருநாமம் இரண்டு ரேபமுடையதாதலால் அவரையே காட்டினபடி.

2. மின்னுமாழியங்கையவனில் "பன்னு நான் மறைப்பல் பொருளாகிய" என்றது-ஸ்வாமி தேசிகன் நான்கு வேதங்களின் பொருளையுமுணர்ந்தவர் என்று காட்டினபடி. இப்பாட்டிலும் நான்காமடியில் வண்டின் பேச்சு வந்திருப்பதில் த்விரேபமான வேதாந்தார்யவர்யரே விஷயம். நாலாவது பாட்டில் (குலமகற்கு இன்னருள் கொடுத்தவன்) என்பது விவாஹத்திற்குப் பொருள் வேண்டிவந்த பிரமசாரியான குலமகனுக்கு அருள் செய்தமை சொன்னபடி. 5, 6 பாசுரங்களின் ஈற்றடியில் (தேன்) என்றிருப்பது ப்ரத்யாஹாரந்யாயத்தாலே (தேசிகன்) என்றபடி—என்பதில் ஸந்தேஹம் வேண்டா. தேனுலாவிய செழும்பொழில்—கருடநதிக் கரையிலுள்ள சோலைகளில் தேசிகன் உலாவப்போகிறாரென்று ஸூசிப்பித்தபடி.

ஏழாவது பாட்டில் (அமளியில் பெடையொடும் இனிதமர) என்றது—திருக்குமாரரான நயனாசார்யருடைய திருவவதாரத்திற்காக, அமளியில்—படுக்கையில், பெடையொடும்—தேவியாரோடுகூட, இனிது அமர்ந்தபடியை ஸூசிப்பித்தவாறு.

ஒன்பதாவது பாட்டில் (மணித்தேர் கோல் கொள்கைத்தலத்தெந்தை) என்றதில்—மணியவதாரமான தேசிகர் நூற்றுக்கணக்கான நூல்களையெழுதுவதற்காகத் திருக்கையில் எழுதுகோலான எழுத்தாணியைக் கொண்டிருந்தபடி ஸூசிதமாகிறது.

ஆக இதெல்லாம் ஒரு தட்டாயும் முடிவு பாசுரம் ஒரு தட்டாயுமிருக்கும்படியை ஆச்சரியமாகக் காணவேணும். [மூவராகியவொருவனை] தேசிகன் தம்முடைய பித்ரு ச்ராத்தத்தில் மூவரை நிமந்த்ரணம் சொல்லிவைக்க, அவர்கள் வேணுமென்று வஞ்சித்து விட, அந்த மூவராகவே (ஹயக்ரீவனாகிற) ஒருவர் வந்து நடப்பித்ததைக் காட்டினபடி. அந்த அடியிலேயே (உமிழ்ந்து) என்று இருப்பதானது, அம்மூவரும் தங்களை அனைவரும் காணும்படி வாசலிலே வந்து வாய்கொப்பளித்தபடியைக் காட்டுகிறது. மேலே [தேவர்தானவர் சென்று சென்று இறைஞ்ச] என்றது தேசிகனை முன்பு தேவப்ரக்ருதிகள் பஹுமானித்து ஆஸுரப்ரக்ருதிகள் அவமானிக்கிறபடியை ஸ்பஷ்டமாகக் காட்டும். இனி அடுத்த எட்டு பக்கங்களில் கொள்ளை கொள்ளையாகக் காண்க. ...

ஸ்ரீமதே வேதாந்த குரவே நம:

# ஆழ்வார்கள் பதின்மருமுகந்த தேசிகன்

நம் தேசிகவள்ளலைப்பற்றி ஆழ்வார்களனைவரும் தம் தம் பிரபந்தங்களில் அறிஞர்கள் அறியுமாறு ஸூசனை செய்திருக்கிறார்களென்பதை ஈண்டு விவரிக்கிறேன்.

1. பொய்கையாழ்வார்:—இவ்வாழ்வார் தமது பிரபந்தத்தை (வை) என்று தொடங்கி (வை) என்றே தலைக்கட்டுகிறார். வைராக்யநிதி தேசிகன் என்று காட்டினபடி. (வை) என்பது வைராக்யத்தைக் காட்டினதாகலாம்; தேசிகனென்று எப்படி தெரிந்துகொள்ள முடியுமென்றால், (விளக்காக) என்பதனால் விளக்கொளி ஸன்னிதியை நினைப்பூட்டி, அங்கே வெய்யகதிரோன்போல் அவதரித்தவரென்று விளக்கினபடி. மேலும் (அடிக்கே சொன்மாலை சூட்டினேன்) என்பதனால் பாதுகாஸஹஸ்ரம் பணித்தமை காட்டினபடி. (செய்ய சுடராழியான்) என்பதனால் ஜய ஜய ஸ்ரீ ஸுதர்சந! ஜய ஜய ஸ்ரீஸுதர்சந என்று ஸுதர்சநாஷ்டகம் இயற்றினவர் என்பதும் காட்டினபடி. நூறுபாசுரமருளிச் செய்ததனால் தேசிகன் நூறு நூறாக நூல்கள் பணிக்கப் போகிறாரென்றும் நூறாண்டிருப்பரென்றும் காட்டினபடி.

முக்கியமான ஸூசனைகேளீர். இவ்வாழ்வார் நாலாவது பாட்டிலேயே * நெறிவாசல்தானேயாய் நின்றானை * என்றதுண்டே, இது மிகப்பொருத்தமான அடையாளம். [வாசல்] தேவப்பெருமாள் ஸன்னிதியில் கோபுரவாசல் தாண்டிப் போனவுடனே [தானேயாய்] முதன்முதலாக ஸேவிக்கத்தக்கவர் தானேயாய்—தேசிகன் தானேயாயிருப்பதைக் காட்டினபடி. ஸ்ரீரங்கத்திலும் வடக்குவாசல் நுழைந்தவுடனே தானேயாய் நின்றவர் தேசிகனே. நின்றான் என்றதில் வெகு ஸ்வாரஸ்ய முண்டு. நிற்கை வடமொழியில் ஷ்டாதாதுவின் அர்த்தம். "ஷ்டா-கதிநிவ்ருத்தௌ" என்பது தாது பாடம். அரசாங்கக் கட்டளையின் மூலமாக கதிநிவ்ருத்தி ஏற்படப் போகிறதென்பது ஸூசிதம். அப்பாசுரத்திலேயே (கதவம் சாத்தி) என்றிருப்பது பின்னையும் ஸ்வாரஸ்யம். புரட்டாசித் திருவோணத்தன்று அதர்க்கணமாக- கதிநிவ்ருத்திக்கு மாறாக—கதியையுண்டாக்குவதாய் நப்பாசையாளர் ஸம்பிரமிக்கையில் போலீஸ் காவலாளர் வந்து சூழ்ந்து கதவைச் சாத்திவைப்பதுண்டே அதைக் காட்டினபடி. ஸாதாரணமாகக் கதவைச் சாத்திவைப்பது முண்டே, அதை வ்யாவர்த்திப்பிக்கைக்காக (போர்க் கதவம் சாத்தி) என்றார். போர் என்பதன் பொருள் தெரியுமே. அதற்கடுத்த (6) பாட்டில் (உள்கிடந்து கைதொழுதேன் கண்டேன் திருவரங்கமேயான் திசை) என்றது அத்யந்த ஸ்வாரஸ்யம். வெளிக்கிளம்பாமல் உள்ளே கிடந்தபடியே திருவரங்கமேயானைத் திசைநோக்கித் தொழுது நிற்கிறாரே இதனைக் காட்டினபடி. [முதல் திருவந்தாதியில் இன்னமும் விரிவாக எடுத்துக் காட்டக்கூடிய தேசிக ப்ரபாவங்கள் பலபல இருந்தாலும் அவற்றை யெல்லாம் பெரியபடியிலே விவரிக்க வேண்டி இங்கே ஸம்க்ஷேபித்தபடி. இதை மேலே ஸர்வத்ர நினைப்பது.] இது மூவாயிரப்படி.

2. பூதத்தாழ்வார்;— இவ்வாழ்வார் (அன்பேதகளியா) என்று தொடங்கி (அன்பு) என்று தலைக் கட்டினதில் வெகு மருமமுள்ளது. (அ) என்பதனால் அநந்தஸூரி ஸூநவே என்கிறபடியே அனந்தாசாருக்குப் புத்திரராக தேசிகன் ஜனிக்கப் போகிறாரென்று காட்டினபடி. (பு) என்று முடித்ததனால் புரட்டாசி மாதத்தில்

அவதரிப்பர் என்று காட்டினபடி. இவரும் தகளி, நெய், திரி, விளக்கேற்றினேன் என்பவற்றால் விளக்கொளி ஸன்னிதியை அவதாரஸ்தலமாகக் காட்டிக்கொடுத்த படி. இவ்வாழ்வார்தாமே நாலாம் பாட்டில் (ஆங்கே திகழுமணிவயிரம் சேர்த்து) என்றதில் மணியின் ப்ரஸ்தாவம் செய்திருப்பதனாலும், அதில் (வயிரம் சேர்த்து) என்று சிறப்புகள் செய்திருக்கிறபடியைச் சொல்லிற்றாகிறது. (அங்கே) என்னுமல் (ஆங்கே) என்று நீட்டியிருப்பதனால் அங்கங்கே மணியைக் கொண்டு போவர் களென்பது காட்டப்பட்டபடி. இவையெல்லாம் மிகச்சிறந்த ஸூசனைகள்.

3. பேயாழ்வார். இவ்வாழ்வார் தொடங்கும்போதே கண்டேன் கண்டேன் என்று ஐந்து தடவை ஸாதிக்கிறார். வடமொழி வியாகரணத்தில் (ஹலந்த்யம்) என்கிற ஸூத்ரத்தினால் 'அந்த்யம் ஹல் இத் ஸ்யாத்' என்று முடிவிலுள்ள மெய்யெழுத்தைத் தள்ள வேண்டிய தென்றபடியால் கண்டேன் என்கிறதிலுள்ள (ன்) என்கிற மெய்யெழுத்தைத்தள்ளி விட்டால் கண்டே! கண்டே! கண்டே! கண்டே! கண்டே! என்று கண்டாமணியவதாரமான தேசிகனே! என்று விளிக்கிற படி. ஐந்து தடவை விளித்ததன் ஸ்வாரஸ்யம் அப்பப்ப! வெகு ஆச்சரியம். மிக அற்புதம். தைத்திரீய உபநிஷத்தில் "ப்ருதிவ்யந்தரிக்ஷம் த்யௌர் திசோவாந்தர திசா:" என்று ஐந்து இடங்களை யெடுத்துக்காட்டியிருக்கிறதல்லவா? கண்டாமணி யைப்பண்ணி மோடார்காரில்வைத்து ப்ருதிவியிலும் திக்குகளிலும் அவாந்தரதிக் கான விதிக்குகளிலும், அதற்கு மேல் ஏரோப்ளானில்வைத்து (அந்தரிக்ஷம்-த்யௌ:) என்னப்பட்ட மேலுலகவழியால் த்வீபாந்தரங்களிலும் செல்லவைப்பர்களென்பது நன்கு காட்டப்பட்டது. இந்த ஐந்து இடங்கள் விவக்ஷிதமில்லையாகில் கண்டே கண்டே!...... என்று ஐந்துமுறை கூவியிருக்கமாட்டாரன்றோ. (செருக்கிளரும்) என்றதும் தேசிகனுக்கு மிகப் பொருத்தமான அடையாளம். எப்படியென்றால், செருக்கிளருமென்பதற்கு- யுத்தத்திற்குக் கிளர்ச்சி செய்பவரென்றுபொருள். ஹயக் ரீவஸ்தோத்ரத்தில் (ஸ்வச்சந்தவாதாஹவ பத்தசூர:) என்று வேண்டிக்கொண் டதை ஸூசிப்பித்தபடி. ஆஹவமென்றால் செரு; யுத்தம்.

இவ்வாழ்வாரே மேலே (பணிந்துயர்ந்த) என்கிற பாட்டில் (மணிகளாலே அணிந்து அங்கு அனந்தனணைக் கிடக்கும்) என்றதில் தேசிக அவதாரரஹஸ்யம் பூர்த்தியாக வந்து விட்டது. (மணிகள்) என்கிற பஹுவசனம் மூன்று மணிகளைக் காட்டும். மீமாம்ஸையில் (வஸந்தாய கபிஞ்ஜலாந் ஆலபேத) என்கிறச்ருதிவாக்யத் தில் கபிஞ்ஜலாந் என்கிற பஹுவசனம் இரண்டுக்கு மேற்பட்ட பலவற்றையும் சொல்லுமானாலும் மூன்றைச் சொல்லி நிற்பதாக முடிவு செய்யப்பட்டது. அந்த கபிஞ்ஜலாதிகரணந்யாயத்தாலே இங்கு மணிகளென்றதற்கு மூன்று மணிகளை அர்த்த மாகக் கொள்க. திருவேங்கடமுடையான் ஸன்னிதியிலுள்ளே (பத்மாஸ நேந பரிசாரவிதௌ ப்ரயுக்தா) என்று தேசிகன்தாமே ஸாதித்த மணியொன்று. தேசிகன் லிபவே அணிந்து கொண்டிருந்த திருமண்காப்போடு விளங்காநின்றவை யாய்அங்கே மஹாமண்டபவாசலிலுள்ள மிகப் பெரிய மணிகள் இரண்டு. ஆக இம் மூன்று மணிகளும், (அங்கு) அங்கிருந்துவந்து, (அனந்தன் அணைக் கிடக்கும்) தேசி கன் திருத்தகப்பனாரான அனந்த ஸோமயாஜியின் அணையிலே = படுக்கைப்பற்றான

தோதாரம்மாவயிற்றிலே, கிடக்கும். அம்மான்- அவர்தான் தூப்புலம்மான். இந்த அந்தரங்கப் பொருள் எல்லார்க்கும் தெரியாதாகையால் [அடியேன் மனந்தனணைக் கிடக்கும் வந்து] என்றூர் பேயாழ்வார். அதை அவர் திருவருளால் [அடியேன் அறியப் பெற்றேன். இதற்கடுத்தபாட்டில் (அந்திவிளக்குமணிவிளக்காம்) என்று தீப ப்ரகாச ப்ரஸ்தாவம் இருமுறைசெய்தமையால் இப்பொருள் ஊர்ஜிதமாம்.

இனி முடிவிற் செல்லுவோம்; (தோலாத வென்றியான்) என்றதனல் (ஜிகீஷதோ மே கவிதார்க்கி கேந்த்ரான்) என்று தேசிகன் தோலாத வெற்றிபெற வேணுமென்று கோரினதைக் காட்டினபடி. அப்பாசுரத்தில் அட்டபுயகரத்தானைப் பாடினது - தூப்பல் மலரில் அஷ்டபுஜத்தெம் பெருமான் விலக்ஷணோர்த்வபுண்ட்ர ப்ரகாசத்துடன் விளங்கப் போகிறுரென்பதைக் காட்டிக்கொடுத்தபடி. (தேனமரும் பூமேல் திரு) என்று முடித்தபடியால் தேசிகன் ஸ்ரீஸ்துதியருளிச் செய்யப்போகிறுரென்று காட்டினபடி. வேறு சில ஆசாரியர்களும் ஸ்ரீயைத் துதித்தவர்களிருந்தாலும் இங்கே (தேனேமரும்) என்று (தே) இட்டபடியால் தேசிகனேயென்பது வெள்ளிடை,

4. திருமழிசைப்பிரான்- தேசிகனுடைய அவதாரம் திருவோணத்தி லென்பதையும், அன்றைக்கு அதிர் வேட்டுகளின் ஒலி எங்கும் அதிரப்போகிற தென்பதையும் இவ்வாழ்வார் (ஓணவிழவில் ஒலியதிர) என்று தெரிவித்த துண்டே. இதைவிட ஆச்சரியம் வேறு கிடையவே கிடையாது. திருவேங்கடமுடையானுடைய ஓணவிழவைச் சொல்லுகிறதாகக் கொண்டால் அங்கு அதிர் வேட் டொலி கிடையாதே. ஆகவே பவிஷ்யத்ஸூசனமே யிது என்று கொள்ளவேணும். மேலும், இவ்வாழ்வாருடைய முதல் பாட்டை உற்று நோக்கினுல் அது நயனுசாருடைய வார்த்தை யென்பது வெள்ளிடை மலையாக விளங்கும். (அந்தாதிமேலிட்டறிவித்தேனும்பொருளை) என்றது (அந்தாதியிருபது மாய்ந்துரைத்தேன்) என்ற பிள்ளையந்தாதி முடிவு பாட்டை நினைப்பூட்டும். கடைசிபாட்டை முதல் பாட்டிலேயே நினைப்பூட்டுவது பெரிய விசேஷமன்ரு? மேலும் (சிந்தாமல் கொண்மினீர் தேர்ந்து) என்றதில் ஒரு பெரிய விசேஷமுண்டு. பிள்ளையந்தாதியை பிரபந்த சாரம் போல் நவீநகல்பிதம் என்று எவ்வளவு திடமாக வாதங்கள் விளைந்தாலும், சிந்தாமல்— மனம் மாறுபடாமல் நீர் தேர்ந்து கொண்மின் என்று ஊக்க மூட்டினபடி. அடுத்தபாட்டில், தேறுங்கால் என்றும் தேவன் என்றும் (தே) என்கிற எழுத்தையே இருமுறை சொன்னபடியால் தேசிகனையே நிலை நாட்டினபடி. உடனே (ஆருமறியார் அவன் பெருமை) என்றது தேசிகனுடைய பெருமை யாருக்குமே தெரியா தென்று காட்டினபடி. அவன் என்பதற்கு எம் பெருமான் என்பது வெளிப்படையான பொருள். தேசிகன் என்பதே உள்ளுறை பொருள். கீழோடும்மேலோடும் சேரவேண்டுகையாலே.

5. நம்மாழ்வார்;— ஆழ்வார்களில் நம்மாழ்வாரே தலைவராதலால் இவர் வெகு வியக்தமாக மணியின் பெருமையை வெளியிடுகிறூர். (12. பேர்கின்றது மணி) என்பது பாசுரத் தொடக்கம். மணியானது திருவேங்கடமுடையான் ஸன்னிதியிலிருந்து காஞ்கியில் தோதாரம்மைவயிற்றில் புகுவதற்காக பேர்கின்றது— இடம் விட்டுப் பெயருகின்றது என்பது ஒரு பொருள், மறுபடியும் [பேர்கின்றதுமணி] மெய்யான மணியே ஊருராகச் சுற்றுவதற்கு மயிலையை விட்டுப் பேர்கின்றது என்றபடி. [பிறங்கி யள்ளல்பயலை ஊர்கின்றது] என்றது, கர்ப்பதாரணத்தினுல் தோதாரம்மைக்கு மசக்கையுண்டானதை ஸ்பஷ்டமாகக் காட்டினபடி. அப்படி

எத்தனைநாள் மசக்கையென்றால் [ கங்குலூழிகளே ] பன்னிரண்டாண்டு கர்ப்பதாரண மாகையால் கங்குலூழிகளே என்றது மிகப்பொருத்தம். ( கணராத்ரம் நிசா பஹ்வ்யஃ என்று அமரம். ) தேசிகன் தாயாருக்கு பன்னிரண்டுவருஷம் கர்ப்ப தாரணமென்பதை நன்கு காட்ட இவ்விஷயத்தை ஆழ்வார் பன்னிரண்டாவது பாட்டில் அமைத்தார். இப்பாட்டை முடிக்கும்போது (தனிவளமே) என்று முடித் தது வெகு ஸ்வாரஸ்யம். தனிவளமென்றது தனிச்சிறப்பு என்றபடி இவ்வண்ண மாக ஆழ்வார்கள் தேசிகன் பெருமையைத் தெரிவிப்பது வேறு எவர்க்கும் அமை யாமல் இவர்க்கே தேசிகனுக்கே தனிச்சிறப்பாக அமைந்ததென்று காட்டினபடி

அடுத்தபடி நம்மாழ்வாருடைய இரண்டாவது பிரபந்தமான திருவாசிரியத் திற்குச் செல்வோம். இங்கு ஒருபெரிய விசேஷம் கேளீர். நம்மாழ்வார் மலை நாட் டுத்திருப்பதியான திருவல்லவாழில் உள்ளே புகமாட்டாமல் புறச் சோலையிலேயே துவண்டதாகத் திருவாய் மொழி தெரிவிக்கின்றது. அதே போல நாம் திருவாசிரி யத்தினுள்ளே புகாமல் அதன் தனியனிலேயே துவள்வோம். "காசினியோர்தாம் வாழக் கலியுகத்தே வந்துதித்த தேசிகனைப் பராங்குசனை" என்பதன்றோ திருவா சிரியத்தின் தனியன், தேசிகனுக்குப் பராங்குச னென்கிற ஒருதிருநாமமும் பொருந்து மன்றோ. பரேஷாம் (கவிதார்க்கிககலபவ்ரஜங்களுக்கு) அங்குசமாயிருந்தவரன்றோ தேசிகன். இவ்வளவு ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பது இவ்விடத்தில் மட்டுமென்று நினைக்க வேண்டா. கீழேகாட்டின விடங்கள்-மேலே காட்டப் போகுமிடங்கள் ஒவ் வொன்றும் ஏறிட்டதல்லாமல் ஸுஸ்பஷ்டமேயன்றோ. மேலே எடுத்த திருவாசிரியத் தனியனில் 'மாசடையாமனத்து வைத்து மறவாமல் வாழ்த்துதுமே" என்றதை நோக்கி நம்மாழ்வார்தாமே திருவாய் மொழி முதற்பத்தின் முடிவில் (மறப்பனோ இனி யானென் மணியையே) என்கிறார். என்மணியை-என்கண்டையை யான் எப்படி மறப்பேனென்கிறார். மறவாமல் என்றதற்கும் மறப்பனோ என்றதற்கும் எவ்வளவு பொருத்தம் பார்த்தீர்களா? ஓரிடத்தில்(தேசிகனை) என்பது, மற்றோரிடத்தில் (மணியை) என்பது ஆஹா! என்னவாய்ப்பு என்ன வாய்ப்பு. சாஸ்த்ரஜ்ஞர்கள் இதை வ்யதிரேகண நிர்தேசம் என்பர்கள்.

இனி திருவாசிரியத்தினுட்புகுவோம். இதில் ஆறுவது பாசுரம் "ஓ ஓ! உல கினதியல்வே!" என்று ஹாஹாகாரத்துடன் ஆரம்பமாகிறது. கீழெல்லாம் திரு மணியின் வைபவமும் திருமணி யவதாரபூதரின் வைபவமும் அநுபவிக்கப்பட்டது. இதில் அவ்வாசார்ய பக்தமணிகளின் வரலாறு அநுபவிக்கப்படுகிறது. ப்ரக்ருத நாம் கொண்ட அநுபவத்திற்கு இப்பாசுரமே ஜீவநர்டி. ப்ரக்ருத அநுபவத்திற்கு 3999 பாசுரங்கள் ஒரு தட்டாய் இப்பாசுரம் மட்டும் தனிப்பட ஒரு தட்டாயிருக்கு மென்று திண்ணமாக எண்ணலாம். இப்பாட்டின் கருத்தை ப்ரத்யக்ஷமாகவன்றோ காண்கிறோம். பாட்டின் கருத்து என்ன வென்றால், மக்களைப் பெறுவதற்கு முன் பும் பெற்ற பின்பும் எண்ணிறந்த நன்மைகளைச் செய்யும் தாய்இருக்க, அவளையுபே க்ஷித்து ஒரு மணைக்கட்டையை ஆதரித்து அதற்குக் கொண்டாட்டங்கள் செய்வா ரைப்போலே, பலவகை உபகாரங்களும் செய்து போருகிற எம்பெருமானிருக்க அவனைவிட்டுப் புதுத்தெய்வங் கொண்டாடுவதென்பது விவேகமிருந்து செய்கிற காரியமோ? அறிவுள்ளவர்கள் இப்படியுஞ் செய்வார்களோ? என்பதாம். ப்ரஸ்து

ந்தாங்குரமென்கிற ஓர் அலங்காரத்தை இப்பாசுத்திற் காணவேணும். இப்பாசுரத்தையே கொண்டு திருமங்கையாழ்வார் தமது திருமொழியில் ( 11-6-6 ) " மற்றிங்கோர் புதுத்தெய்வங் கொண்டாடுந் தொண்டீர், பெற்றதாயிருக்க மணை வெந்நீராட்டுதிரோ மாட்டாத தகவற்றீரே" என்றருளிச்செய்தார்.

இதன் விவரணம் கேளீர். " தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி பதம் பாதி நாந்யத்ர " என்று பல்கலையோர்தம்மால் ப்ரதிஷ்டாபித யதார்த்த ப்ரபாவரான எம்பெருமானார் " நாட்டில் பிறந்து படாதனபட்டு நாட்டை நலியுமரக்கரை நாடித்தடிந்திட்டு" ச் செய்த உபகாரங்கள் எண்ணிறந்தவை. ' நானொருவன் நரகத்திற்குப் போனாலும் வாழ்ந்திடுவார் பலரன்றோ' என்று துணிந்து ஸாதித்தவர். காஞ்சியெங்கே காச்மீரமெங்கே? அங்கேறச் சென்று அரும் பெரும் பாடுகள்பட்டு வ்ருத்திக்ரந்தத்தைப் பெற்றுக் கடாக்ஷித்து நெஞ்சில் தேக்கிக் கொண்டவர். ஸம்பத்குமாரனை நாடிக் கொணர்ந்து ஆலயங்கட்டி ஸ்தாபித்த பெருமான். உலகம் நீடூழிவாழ எழுபத்துநான்கு ஸிம்ஹாஸனாதிபதிகளை நியமித்தருளினவர். " ஏகாந்திநாம் த்வாதசபிஸ் ஸஹஸ்ரைஸ் ஸம்ஸேவிதஸ் ஸம்யமி ஸப்தசத்யா " என்று ஸமகாலத்தில் வடுகநம்பி ஸாதித்தபடி பன்னீராயிரம் பரமைகாந்திகளும் எழுநூறு ஜீயர்களும் புடைசூழ விளங்கினவர்; சாறுவாக மதநீறு செய்து சமணச் செடிக் கனல்கொளுத்திச் சாக்கியக் கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரி முறித்திட்டு மாறு செய்திடு கணாதவாதியர்கள் வாய்தகர்த்து, அறமிகுத்து மேல்வந்த பாசுபதர் சிந்தியோடும்வகை வாதுசெய்தவர்; மேல்நாட்டு மேதாவிகளும்மெச்ச மேம்படு பாஷ்யமநுக்ரஹித்தவர்; * பாருலகிலாசையுடையோர்க் கெல்லாமாரியர்காள் கூறு மென்று பேசி தரிசனத்தை வளர்த்திட்டவர்; * சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறியாவுந் தெரிந்தவனென்று ஸாக்ஷாத்கரித்தறிந்த அமுதனார்பேச நின்றவர்; மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்து மாறனுரைசெய்த தமிழ்மறை வளர்த்த வள்ளல்; மன்னிய தென்னரங்காபுரிமாமலை மற்றுமுவந்திடவும், மங்கையராளி பராங்குச முன்னவர் வாழ்வு முளைத்திடவும் வந்தவர்; கிம்பஹுநா? ஸர்வதேச தசாகாலேஷ் வவ்யாஹதபராக்ரமமான திவ்யாஜ்ஞை நாடெங்கும் செங்கோல் செலுத்த நிற்பவர்.

மேலேயெடுத்த திருவாசிரியப்பாசுரத்தில் "தேர்ந்துலகளிக்கும் முதற்பெருங் கடவுள் நிற்ப என்றதற்கு உள்ளுறை பொருள்விவரித்தோமானோம். இனி "தனது புல்லறிவாண்மை பொருந்தக்காட்டி— தானறி தெய்வம் பேணுதல்" என்றபகுதிக்கும், கலியன் திருமொழியில் "மற்றிங்கோர் புதுத்தெய்வங் கொண்டாடுந் தொண்டீர்" என்றதற்கும் உள்ளுறை பொருளை நாடு நகரமும் ஊருமுலகமும் நன்கறிந்திருக்க நாம் விளக்க வேண்டுமா? ஒரு குக்ஷிஜரும் ஒரு பிக்ஷுகருந்தவிர வேறொருவர் அணுகமாட்டாதேயிருந்து "ஆத்மஸ்துதி ஆறத்யாயம், பரநிந்தை பத்தத்யாயம்" என்றதை மெய்ப்பிக்கவல்ல உக்திகளைப் பரப்பிக் கொண்டாட்டஞ் செய்வது நிகழுமென்றறிந்தே 'ஓ ஓ உலகினதியல்வே!' என்று கதறினார் பாவம் ஆழ்வார். அந்த பரமாசாரியர்க்குத் தமிழ் தெரியாதென்றும் வறட்டுஸம்ஸ்க்ருத மொன்றேசிறிது தெரியுமென்றும், அவர்க்கு உபயவேதாந்த ப்ரவர்த்தகத்வமில்லையென்றும் பேசு

மவர்களை "தனது புல்லறிவாண்மை பொருந்தக்காட்டுபவர்களாகக் குறிப்பிட்டனர் ஆழ்வார் இத்தகைய பவிஷ்யத் ஸமாசாரஸாக்ஷாத்காரத்திற்கு மேற்பட்ட அற்புத முமுளதோ? இதற்கடுத்தபாட்டில் 'ஒராவிலைச் சேர்ந்த எம்பெருமா மாயனை யல்லது ஒருமாதெய்வம் மற்றுடையமோயாமே'' என்றதும் அற்புதம். "ஆலமர *நிழலில் ஆயிரம் பேர் ஒதுங்கலாம்" என்று வசனம். பல்லாயிரவர் ஒதுங்கிவாழ நின்ற பாதயுகள முடைய பகவத்ராமாநுஜரையே ஒராவிலைச் சேர்ந்த எம் பெருமா மாய னென்றது. இனி அடுத்த குலசேகராழ்வாரைப் பிடிப்போம்.

6. குலசேகராழ்வார். இவ்வாழ்வார் வாய் திறக்கும் போதே (இருளிரிய) என்று அஜ்ஞானந்தகாரம் தொலையப்போகிற தென்றார். யாராலே? என்ன, (சுடர்மணி கள்) என்று கண்டையின்ப்ரஸ்தாவத்தைச் செய்தார். திருமணியினவதாரத்தாலே இருள் இரியப் போகிறதென்று காட்டினபடி. உடனே (இமைக்கும்நெற்றி) என்றும் (பணம் ஆயிரங்கள்) என்றும் ஸாதித்தபடியாலும், இதுதானும் ஸ்ரீ ரங்க விஷயமான பாசுரமாகையாலும் ஸ்ரீ ரங்க தேசிகனுக்கு நெற்றி நாமத்தில் நேர்ந்த விசேஷத்திற்காக ஆயிரம் என்பது ஸூசிதமாகிறது. பணம் என்பது பொதுவாக நாணயத்தைச் சொல்லுமானாலும் இங்கே சிறப்பான நாணயம் சொல்லப்படும். *அர்த்தாத் ப்ரகரணாத் லிங்காத் ஔசித்யாத் அர்த்தநிச்சயஃ* என்பர்களே. அது மேல்ஸ்தானங்களிலும் ஊர்ஜிதமாயிற்றென்பதை அடுத்த இரண்டாம் பாட்டி லும் *ஓர் ஈரைஞ் ஞாறு* என்றருளிச் செய்தார். 2 × 500 = 1000 அல்லவா? முதற் பாட்டிலேயே "அனந்த னென்னு முயர் வெள்ளையணையை மேவி'' என்றதில் தோண்டத் தோண்டச் சுரக்கும் சீரியபொருள். அனந்தன்—அனந்த ஸோமயாஜி யினுடைய, அணையை மேவி மணிவிளங்கும்= படுக்கையை மேவி வேங்கடேசன் கண்டா மணி விளங்கின வாறு சொல்லிற்றாயிற்று. இதிலேயே ஈற்றடியில் 'கருமணியை' என்றது மிகவும் மருமமான வார்த்தை. கரு என்று கர்ப்பத்திற்குப் பெயரல்லவா? மணியானது தோதாரம்மையின் கர்ப்பத்தில் புகுந்த படி சொல்லிற்று-

அலங்கார சாஸ்த்ரத்தில் முத்ராலங்காரத்தைத்தான் ஆலங்காரிகர்கள் அதி கமாக ஆதரிப்பது- ''ஸூச்யார்த்தஸூசனம் முத்ரா ப்ரக்ருதார்த்த பரைஃ பதைஃ' என்பது முத்ராலங்கார லக்ஷணம் இந்த ரீதியிலே ஸூச்யார்த்தஸூசனம் பண்ணி யிருக்குமழகு *மணிவயிறு வாய்த்தவனே* என்றதில் அற்புதம் என்னத்தகும்-

மேலே ஒன்பதாம் பாட்டில் (தூராதமனக்காதல்) இத்யாதியில் (தூ) தூப்பலிலே, (ரா) ராவின- (இது ப்ரஸித்தமான கதை) அது எப்படி ஸாத்யமா யிற்று என்ன; [தொண்டர்தங்கள் குழாம் குழுமி] பெரிய கூட்டங் கூடிச் செய்த படியாலே ஸாத்யமாயிற்றென்கை- இத்தகைய பெருமையான அர்த்த விசேஷங்கள் அருமையாகச் சுரக்கும்- மேலேபோவோம்-

7. பெரியாழ்வார். இவ்வாழ்வார் தொடங்கும்போதே மணிவண்ணா! என்கிறார்; வண்ணமென்றால் வடிவு. மணியே வடிவானவனேயென்று தேசிகனை விளித்தபடி.

மேலே பெரியாழ்வார் திருமொழியில் (4-4-6. *நாதனை நரசிங்கனை* என்றது (ஸ்ரீமாந்வேங்கட) நாதனைத்தொடங்கி (கவிதார்க்கிக) சிங்கனைச்சொல்லி முடித்த படி. இனி கடைசி பாட்டுக்குச்செல்வோம். (வேயர்தங்கள்) என்கிறார். வேயர் என் றது வேதாந்தார்யர் என்றபடியல்லவா? அருணத்தில் (கௌராவஸ்கந்திந் அஹல்

யாயைஜார) என்ற விடத்தில் (கௌர) என்றதற்கு 'கௌதமநார' என்று தானே அர்த்தம் செய்கிறார்கள். *ஆதிரந்த்யேந ஸஹேதா.* இவ்வாழ்வார் "நீ பிறந்த திருவோணம்" என்று அடிக்கடி ஸாதிக்கிறார். ரோகிணியில் பிறந்த கண்ணனுக்கு இது சேராது. நம் தேசிகனுக்குத்தான் சேரும். திருவோணத்தில் பிறந்தவர்கள் இன்னும் சிலர் இருந்தாலும் தேசிகனைத்தான் தொடும் என்பதற்குத் தகுந்த அத்தாட்சி கேளுங்கள், நீ பிறந்த திருவோணம் என்பதற்குமுன்னே * நின்ற மரா மரம் சாய்த்தாய் * என்கிறார். சாய்த்தாய் என்னும்போது (ஸ்ரீமதே வேங்கடே) சாய என்பது நினைவுக்கு வராமற் போக மாட்டாதே; இது ஆச்சரியமான ஸூசக மல்லவா! இது போன்ற ஸூசகம் வேறு எங்குமே யார்க்குமே கிடைக்காதே. தவிரவும் மேலே (3·3-9) ல் "திருநாள் திருவோணமின்றேழுநாள்" என்று ஏழு என்கிற லக்கத்தைக்குறிப்பிடுகிறார். அது எழுநூறாண்டு விழாவை நினைவூட்டினபடியல்லவா? அதிலேயே மூன்றாமடியில (கண்ணாலம் செய்ய) என்கிறார். இந்த நூற்றாண்டு விழாவை நாம் பெரிய கண்ணாலமாக நடத்தப்போகிறோமென்று காட்டியே திருமல்லவா? அல்லது கண்ணாலம் செய்துகொள்ள விரும்பிப் பணம் வேண்டி வந்த பிரமசாரிக்கு அருள்செய்த கதையின் ஸூசனமாகவுமாம். .... .... *

ஆண்டாள்;—திருப்பாவை தொடங்கும்போதே இளஞ்சிங்கமென்றாள்; மேலே சீரிய சிங்கமென்கிறாள். இது, கவிதார்க்கிக சிங்கத்தின் பால்யயௌவனங்களை யநுபவித்தபடியல்லவா? இரண்டாம் பாட்டில் (பரமனடிபாடி) என்றது பாதுகாஸஹஸ்ரம் பாடினபடியைச் சொன்னதல்லவா? முக்கியமாக தூமணிமாடமென்கிற பாசுரம் ஸ்வாமிக்கு வெகு பொருத்தம். (தூ) தூப்பலில் வந்துசேர்ந்த. (மணி) கண்டாமணி. சுற்றும் விளக்கெரிய என்றதனால் விளக்கொளி கோவிலையும் ஸூசிப்பித்தபடி மேலே (துயிலணை மேல் கண்வளரும்) என்றது விளக்கொளி யெம்பெருமானுடைய புராதனமான நிலைமையைக் காட்டினபடி. *விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில்* என்றவிடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை "திருத்தண்காவில் கண்வளர்ந்தருளுகிறவன்" என்றும் "கிடக்கிற கிடை" என்றும் அருளிச்செய்திருக்கையாலே தீபப்ரகாசனுடைய பழைய திருக்கோலம் சயனத் திருக்கோலமேயென்று விளங்குவதனால் * துயிலணை மேல் கண்வளரும் மாமான் * என்று அதையும் ஸூசிப்பித்தபடி. (மணிக்கதவம் தாள்திறவாய்) என்றது வெகு ஸ்வாரஸ்யம். மணி = திருமலையிலிருந்து மணி வந்திருக்கிறது; கதவம் தாள்திறவாய் = கர்ப்பத்தினுள்ளே புகும்படி இடம்கொடு என்றவாறு. மேலே நாயகனாயிலும் மணிக்கதவம் தாள்திறவா யென்றதில் விசேஷார்த்தம் அபாரமானது.

தொண்டரடிப் பொடியாழ்வார்;—இவ்வாழ்வார் தொடங்கும்போதே "நமன்தமர் தலைகள்மீதே உழிதருகின்றோம்" என்றதானது "வாதிநாம் சிரஸ்ஸு நிஹிதம் மயா பதமதக்ஷிணம் லக்ஷ்யதாம்" என்ற யதிராஜஸப்ததி ஸூக்திஸ்மாரகமென்பதொன்று; மேலே * அச்சுவை பெறினும் வேண்டேன் * என்றது * வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ:* என்றதற்கு ஸ்மாரகமென்பது மற்றொன்று. தேசிகன் இப்படியருளிச்செய்யப் போகிறாரென்பதை முன்னமே ஞானக்கண்ணால் கண்டறிந்து பேசின பாசுரங்களன்றோ இவை,

திருப்பாணாழ்வார்;— இவ்வாழ்வார் பாசுரந் தொடங்கும்போதே அமலன் விமலன் என்கிறார். இதுதானும் ஸ்ரீரங்கத்திலே யாகையாலே ஸ்வாமி தேசிகன் ஸ்ரீரங்கத்திலே யெழுந்தருளி அமல விமல நிமல நின்மலனாகி, தம்மைப்போலவே ரங்க நாதனை ஆபாத சூடமநுபவித்து பகவத்யான ஸோபானம் ஸாதிக்கப் போகிறாரென்றும், அதில் (வித்வத் ஸேவா விமல மநஸா வேங்கடேசேந) என்று ஸாதிக்கப் போகிறாரென்றும் கண்டறிந்து காட்டினபடியன்றோ இது இவ்வாழ்வார் முதற் பாட்டில் விமலனென்றதை ஸ்வாமி கடைசி ச்லோகத்தில் வைத்துக்காட்டினது ஒரு சிறந்த சாதுர்யம். இவ்வாழ்வார் 'அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்' என்றதை ஸ்வாமி (வித்வத் ஸேவா விமலமநஸா) என்றது கொள்ளை கொள்ளையான ஆச்சரியம்.

திருமங்கையாழ்வார்;— இவ்வாழ்வாருடைய பெரிய திருமொழியில் ஸாரமான பாசுரம் (10—1—2) *பொன்னை மாமணியை* என்பது நெடுநாளாகவேப்ரஸித்தமானது. வேங்கடத்துச்சியில் கண்ட மாமணியைத் தண்காவிலே வந்து கண்டதாகஸாதிக்கிறாரே, இதைவிட வேறு வேண்டுமோ? வேங்கடத்தில் கண்டமணி எது தெரியுமோ? மாமணி; பொன்ன மாமணி. மாமணி யென்றதனால் சிறியமணியன்று; மிகப்பெரிய மணியென்று காட்டினபடி. அதுதான் எங்கேயுள்ளதென்ன; (பொன்) தெலுங்கில் பொன்னை பங்கார மென்பர்கள்; திரு வேங்கடமுடையான் ஸன்னிதியினுள் மஹாமண்டபத்திற்குப் புகும்வாசல் பங்காரவாசலெனப்படும். அந்த வாசலிலே நெடுங்காலமாகக் கட்டப்பட்டுள்ள பெரியமணி (வேங்கடநாதார்ய:) என்பதற்காக ஒன்றும், (வேதாந்தாசார்யவர்ய:) என்பதற்காகவொன்றுமாக இரண்டு விளங்குவது காணலாம். அது எப்படிப்பட்டதென்ன, (அணியார்ந்தது) அலங்காரமமைந்தது பகவத் பரிகரங்களுக்கு எது அலங்காரம்? *நெற்றியுள் நின்றென்னையாளும் நிரைமலர்ப்பாதங்கள் சூடி* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி ஊர்த்வபுண்ட்ரமேயாகும். அப்படிப்பட்ட அணியார்ந்ததான பெரியமணியை முதலில் வேங்கடத்துச்சியில் கண்டு பிறகு தண்காவிலே கண்டதாக வருளியது வெகுஅற்புதம்! மிக அற்புதம்!! .... .... .... *

(வெண்பா)

ஆழ்வார்க ளெல்லாரு மாராய்ந் தருள்செய்த
வாழ்வாம் பெருமைமிகு வாதிசிங்கம்—ஏழ்பாருங்
கொண்டாட வந்துதித்த கோதிலா மேன்மையெலாம்
கண்டார்தாங் கல்விக் கடல்.

இஃது எழுதியவர் யார்? "புலத்தலொல்லுமோ ஞாயிற்றதொளியே" (புறநானூறு)

முற்றிற்று:

— கடிதம் —

# அடியேனது சிறிய விண்ணப்பம்

[ஸ்ரீ உவே. வித்வான். K. பிச்சுமணி ஐயங்கார், உல்லாஸநகர்.]

திருநெல்வேலி மாவட்டம் சங்கர நயினார் கோவிலிலிருந்து ஆறுமைல் தூரத்தில் உள்ள ஸ்ரீநவநீத கிருஷ்ண ஸ்வாமி ஸந்நிதி சென்ற பல தலைமுறைகளாக பிரசித்தி பெற்றதாகும். இந்த ஸந்நிதி திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள, வானமாமலை ஜீயர் ஸ்வாமி, திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமி, ஆழ்வார் திருநகரி எம்பெருமானார் ஜீயர் ஸ்வாமி—இம்மூவர்களாலும் மங்களாசாஸநம்பெற்றதாகும். இந்த ஸ்வாமிகளின் அனுக்ரஹத்தால் இக்கோவிலின் புனர்நிர்மாணகார்யம் 1961—ஆம் ஆண்டிலிருந்து நடைபெற்று வருகிறது. இங்கு ஸேவை ஸாதிக்கும் ஸ்ரீ நவநீத கிருஷ்ண ஸ்வாமியை ஒரு தடவை போய் ஸேவித்தாலும் ஸகல ஸௌபாக்கியங்களும்—முக்கியமாக ஸந்தான பாக்கியம்—பெறலாமென்பது அநுபவஸித்தமான விஷயம். ஆகவே இந்த ப்ரத்யக்ஷ தெய்வத்தின் ஸந்நிதியை புனர்நிர்மிக்கும் கைங்கர்யத்தில் பக்த ஜனங்கள் யாவரும் ஈடுபடவேண்டுமென்பது அடியேனது விண்ணப்பம். கைங்கர்யத்திற்கு உதவி செய்து கீழ்க்காணும் முகவரியிலிருந்து ரசீது பெற்றுக்கொள்ளலாம்.



1. Shri N. R. Thiruvenkatacharya, B.A.,
   Scientific Astrologer,
   48, Wallajah Road, Madras-2.

அல்லது

2. Shrimathi Jaya Devi,
   162/16, Ulhas Nagar 1.
   (Via) Bombay.

# விவாஹ நிகழ்ச்சி

கீலகஞு ஆவணிமீ 2உ (19—8—68) திங்கட்கிழமை தினம் சென்னை, திருவல்லிக்கேணி சிங்கராச்சாரி தெருவில் இருக்கும் அல்லத்தூர் நாதமுனி செட்டியார் இராமாநுஜ கூடத்தில் டாக்டர் டி. பி. ராஜகோபால ஐயங்காரின் த்விதீய குமாரத்தி ஸௌ: பிரேமலதாவுக்கும் புதுவை ஆர். ஜெகன்னாத ஐயங்கார் ஜ்யேஷ்ட குமாரர் சிரஞ்சீவி: வீரராகவனுக்கும் விவாஹம் வெகு விமரிசையாக நடந்தது. விவாஹத்திற்கு



அநேக பிரமுகர்களும், உறவினர்களும் வருகை தந்து ஆசீர்வதித்தனர். காலை முகூர்த்த வேளையில் ஸ்ரீமான் சதாபிஷேகம் ஸ்ரீரங்கம் கோவிந்த நரஸிம்ஹாச்சாரியார், ஸ்ரீபெரும் பூதூர் ஆசுரி திருவேங்கடாசாரியார் ஸ்வாமியும் பல கனபாடிகளும் எழுந்தருளியிருந்து வதூவரர்களை ஆசீர்வாதம் செய்தார்கள். அன்று மாலை தேநீர் விருந்தும், வித்வான் வி. வி. சுப்ரமண்யம் சிரஞ்சீவி ராகவ பாரத்வாஜ் அவர்களின் இன்னிசைக் கச்சேரியும் இனிது நடந்தன.

—நமது நண்பர்

# விளக்கொளிஸன்னிதி தேசிகன் மஹோத்ஸவம்

ஸ்ரீ நிகமாந்த மஹா தேசிகனுடைய திருவவதார ஸ்தலமான திருத்தண்காவில் ஸ்வாமியின் புரட்டாசித் திருவோண மஹோத்ஸவம் வாஹனப் புறப்பாடுகளுடனும் திருத்தேர் வலத்துடனும் 21 வேளைகளில் வெகு அற்புதமாக நடைபெற்றது. ஸ்ரீமான் கந்தாடை ஸ்ரீராமதாசரதி ஐயங்காருடைய உழைப்பு மிக மெச்சத்தக்கதாயிருந்தது. ○